# வைதிக தர்ம வர்த்தனி



மலர் 12
இதழ் 9

விகாரிஷு
ஆனிமீ

ஆசிரியர் : ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

| தேதி. | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ச்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 15 | திங். | நவ. | 36-47 | உத். | 0-17 | | — |
| | | | | | ஹஸ். | 57-27 | சி. | |
| 2 | 16 | செவ். | தச. | 31-05 | சித். | 53-07 | சி. | — |
| 3 | 17 | புதன் | ஏகா. | 24-05 | சுவா. | 47-40 | சி. | — |
| 4 | 18 | வியா. | த்வா. | 16-00 | விசா. | 41-18 | சி. | த்.த்ர |
| 5 | 19 | வெள். | த்ர. | 7-15 | அனு. | 34-25 | சி. ம. | சசி. |
| | | | சசி. | 58-13 | | | | |
| 6 | 20 | சனி ○ | பௌ. | 49-15 | கேட். | 27-27 | சி. | பௌ |
| 7 | ஜூன் மீ 21 | ஞா. | ப்ர. | 40-50 | மூலம். | 20-50 | அ. சி. | ப்ர. |
| 8 | 22 | திங். | த்வி. | 33-25 | பூரா. | 15-02 | ம. | த்வி. |
| 9 | 23 | செவ். | த்ரி. | 27-20 | உத்தி. | 10-30 | சி | த்ரி. |
| 10 | 24 | புத. | சது. | 23-08 | சிர. | 7-40 | சி. | ச.ப |
| 11 | 25 | வியா. | பஞ். | 20-55 | அவி. | 6-50 | சி. ம. | ஷஷ் |
| 12 | 26 | வெ. | ஷஷ். | 20-55 | சத. | 8-05 | சி. | சப். |
| 13 | 27 | சனி | ஸப் | 22-55 | பூரட். | 11-23 | ம. சி. | — |
| 14 | 1959 ௵ 28 | ஞா. | அஷ். | 26-50 | உத்தி. | 16-35 | அ. | அஷ் |
| 15 | 29 | திங். | நவ. | 32-05 | ரேவ. | 23-10 | சி. | நவ. |
| 16 | 30 | செவ் | தச. | 38-10 | அசு. | 30-37 | சி. | தச. |
| 17 | 1 | புதன் | ஏகா. | 44-30 | பர. | 38-20 | சி. அ. | ஏகா. |
| 18 | 2 | வியா. | த்வா. | 50-35 | க்ருத். | 45-53 | ம. | த்வா. |
| 19 | 3 | வெள். | த்ர. | 56-00 | ரோ. | 52-50 | ம. சி. | த்ர. |
| 20 | 4 | சனி | சசி. | 60-00 | மிருக. | 58-55 | சி. | சசி. |
| 21 | 5 | ஞா. ● | ,, | 0-33 | திரு. | 60-00 | சி. | அமா |
| 22 | 6 | திங். | அமா. | 4-05 | ,, | 4-05 | சி. அ. | ப்ர. |
| 23 | 7 | செவ். | ப்ர. | 6-37 | புன. | 8-15 | சி. | த்வி. |
| 24 | ஜூலை மீ 8 | புதன் | த்வி. | 8-08 | பூச. | 11-23 | சி. | த்ரி. |
| 25 | 9 | வியா | த்ரி. | 8-43 | ஆயி. | 13-38 | சி. அ. | சது. |
| 26 | 10 | வெள். | சது. | 8-20 | மக. | 14-55 | ம. சி | பஞ். |
| 27 | 11 | சனி | பஞ். | 6-57 | பூர. | 15-15 | சி. | ஷஷ் |
| 28 | 12 | ஞா. | ஷஷ். | 4-33 | உத். | 14-35 | அ | சப். |
| 29 | 13 | திங். | ஸப். | 1-10 | ஹஸ். | 12-53 | சி. | அஷ் |
| | | | அஷ் | 56-40 | | | | |
| 30 | 14 | செவ். | நவ. | 51-12 | சித். | 10-07 | சி. | நவ. |
| 31 | 15 | புதன் | தசமி | 44-45 | சுவா. | 6-20 | சி. | தச. |
| 32 | 16 | வியா. | ஏகா. | 37-40 | விசா. | 1-43 | சி. பி. | ஏகா. |
| | | | | | அனு. | 56-27 | | |

3, 17, 32௳ ஏகாதசி. 4, 19௳ ப்ரதோஷம். 18௳ கிருத்திகை.

**எப்போதும் ஆநந்த நிலையே மோக்ஷம்.**

வைதிக தர்ம வர்த்தனீ.



விகாரிஞு ஆனிமீ

மலர் 12] [இதழ் 9.

தனிப்ரதி அணு 7.

வருஷசந்தா ரூ. 5

கார்யாலயம்: கடவாசல்,

வடகால் P.O. (Via.) சீர்காழி.

(தஞ்சை ஜில்லா.)

## பொருளடக்கம்.



## நவரஸப் பகுதி.

(கௌண்டின்யன்)

### நீ ஏன் உன்னைத் தேடுகிறாய்?

ஒரு க்ஞாநி தன்னிலும் சிறந்த க்ஞாநியிடம் உபதேசம் பெறச் சென்றார். அவர் நீரிலமர்ந்து நிஷ்டை செய்பவர். அவரைத் தேடிப் பிடித்து ஆத்மாவைக் காட்ட வேண்டுமென்று வேண்டினார். அவர் கரை ஏறிவந்து இரு அப்பா! ஸ்நாநம் செய்து வருகிறேன் என்றார். சிஷ்யன், இவ்வளவு நேரம் நீரில்மூழ்கித்தானே இருந்தீர்? குரு, ஆம்! நீ தானே ஆத்மா! அதை மறந்து நீ ஏன் ஆத்மாவைத் தேடுகிறாய்?

### வெளியில் வந்துவிட்டானா?

மனைவி சிறந்த பக்தை. ஸதா ராமநாமம் கூறுவள். பதி வாயால் ஒரு நாள்கூட ராமநாம கூறுவதில்லை. அது அவளுக்குப் பெருங்குறை. எங்கு சென்றாலும் என் பதிக்கு பக்தி உண்டாகவேண்டும் என பிரார்த்திப்பாள். ஒரு நாள் காலை வீட்டை அலங்கரித்து பல ஸாதுக்களுக்கு ஸமாராதனை செய்யஸகலஏற்பாடும் செய்தாள். பதி என்ன விசேஷம்? ம: வெகுநாளாக நான் கோரியது கைகூடியது! ப: அஃதென்ன? ம: தங்கள் வாக்கில் ராமநாமம் வந்தது. ப: ஐயோ! எப்போ? ம: இரவில் தூங்கும்போது. ப: ஆஹா! மநதிலிருந்து வெளியில் வந்துவிட்டானா ராமன்? ம: மநதாலிதுவரை ஜபித்தாரா? நான் அறியவில்லை. மாநஸிக ஜபமே சிறந்தது.

### வயிறு அதிகம், அதிகம் வையுங்கள்.

வைச்வதேவம் என்ற கர்மாவை நித்யம் நாம் செய்யவேண்டும். அதில் ஸகல வஸ்துக்களுக்கும் அன்னம் அளிக்கவேண்டும். தர்மாயஸ்வாஹா எனக்கூறி அதர்மாயஸ்வாஹா என்று அதர்மத்திற்கு அன்னமளித்தார் ஒரு வைதிகர். அருகிலிருந்த லௌகிக ரஸிகர், தர்மம் குன்றி வருகிறது. அதற்கு அளித்தது சரி. அதர்மத்திற்கும் அவ்வளவே அளிக்கிறீர்களே! அதர்மம் வளர்ந்து, அதற்கு வயிறும் அதிகமல்லவா? அதற்கேற்க அதிகம் செய்ய வேண்டாமா? என்றார்.

### நாமிருவருமே ராக்ஷஸர்!

பருத்தியூர் ஸ்ரீ க்ருஷ்ணசாஸ்த்ரிகளை ஒரு கதைகேட்கும் ஸாது ஸந்தேஹம் கேட்டார். ஸாது, சாஸ்த்ரிகளே! தாங்கள் ஸதா ஸாக்ஷாத் ராமன், ஸாக்ஷாத் ராவணன், சக்ரவர்த்தி மகன், ராக்ஷஸன் என்கிறீர்களே! அதில் ராமன் ராக்ஷஸனா? ராவணன் ராக்ஷஸனா? என்று கேட்டார். சாஸ்த்ரிகள் வருத்தத்துடன் இவ்வளவு ரசிகரான நீர் ஒரு ராக்ஷஸர்! உமக்கு கதை கூறுகிற நான் ஒரு ராக்ஷஸர்! என்றார். அரஸிகனிடம் கவித்வம் கூறும்படி என் தலையில் எழுதாதே!

அதே ஆநந்தம் ரஸம் என்ற பிரும்மம்.

# ஸாமவேத ப்ரஹ்மயக்ஞம்.

ओं आचम्य ॥ शुक्लाम्बरधरं + शान्तये ॥ प्राणानायम्य ॥ ममोपात्त समस्त दुरितक्षयद्वारा श्री परमेश्वर प्रीत्यर्थं ब्रह्मयज्ञं करिष्ये ।

ब्रह्मयज्ञेन यक्ष्ये ॥ विद्युदसि विद्यमे पाप्मानमृतात् सत्य मुपैमि ॥ इतिजलमुपस्पृश्य ॥ तत्स वितुर्वरेण्यं । ओं । भर्गो देवस्य धीमहि । ओं । धियोयोनः प्रचोदयात् । ओं । तत्सावितुर्वरेण्यं भर्गोदेवस्यधीमहि । ओं । धियोयोनः प्रचोदयात् । ओं । तत्सवितु-र्वरेण्यं भर्गोदेवस्यधीमहि । धियोयोनः प्रचोदयात् । ओं । भूः । ओं । भुवः । ओं । सुवः । ओं । सत्यं । ओं । पुरुषः । ओं । भूः । भूः ः । होइ । भूः । होइ । भूः । हा ऽवा । ए । सुवर्ज्योतीः । ओं भुवाः । भुवः । होइ । भुवः । होइ भुवः । हा ऽवा । ए । सुवर्ज्योतीः । ओं सुवाः । सुवः । होइ । सुवः । होइ । सुवः । हा ऽवा । ए । सुव ज्योंतीः । ओं । सत्यां । सत्यं । होइ । सत्यं । होइ । सत्यं । हा ऽवा ए । सुवर्ज्योतीः । ओं पुरुषाः । पुरुष । होइ । पुरुष । होइ । पुरुष । हा ऽवा । ए । सुवर्ज्योतीः । ओं । तत्सवितुर्वरेणियों भार्गो देवस्य धीमाही । धियोयोनः प्रचो । हीम् । आ । दायो । आ । ॐ ।

अग्निमीळे पुरोहितं यज्ञस्य देवमृत्विजं । होतारं रत्नधातमं । ओं इषेत्वोर्जेत्वा, वायवस्थो पायवस्थ देवोवस्सविता प्रार्पयतु श्रेष्ठ-तमाय कर्मणे ॥ ओं अग्न आयाहि वीतये गृणानो हव्यदातये । निहोता सत्सिबर्हिषि । ओं शन्नोदेवीरभिष्टये आपोभवन्तुपीतये । शंयोरभिस्स्रवन्तुनः ॥ ओं सत्यंतपः श्रद्धायां जुहोमि ॥ ओं नमो ब्रह्मणे नमो अस्त्वग्नये नमः पृथिव्यै नम ओषधीभ्यः । नमो वाचे नमो वाचस्पतये नमो विष्णवे बृहते करोमि ॥ वृष्टिरसि वृश्चमे पाप्मानमृतात्सत्यमुपागाम् ॥ इत्युपस्पृश्य ॥ देवऋषि पितृ तर्पणं

---

करिष्ये । दैवतीर्थेन ॥ ब्रह्मादयो ये देवाः तान् देवान् तर्पयामि । सर्वान् देवान् तर्पयामि । सर्वदेवगणान् तर्पयामि । सर्व देवपत्नी स्तर्पयामि । सर्व देवगणपत्नीस्तर्पयामि । सर्वदेवपुत्रान् तर्पयामि । सर्वदेवगणपुत्रान् तर्पयामि ॥ *(இவ்வேளையும் நுனி விரலால் விடவும்.)* निवीतीभूत्वा ॥ ऋषितीर्थेन ॥

कृष्ण द्वैपायनादयो येऋषयः तान् ऋषीन् तर्पयामि । सर्वान् ऋषीन् तर्पयामि । सर्वऋषिगणान् तर्पयामि । सर्वऋषिपत्नीस्तर्पयामि । सर्वऋषिगण पत्नीस्तर्पयामि । सर्वऋषिपुत्रान् तर्पयामि । सर्वऋषिगणपुत्रान् तर्पयामि । *(இவ்வேளும் உட்கையினுல் விடவும்.)* उपवीती ॥ देवतीर्थेन । ऋग्वेदं तर्पयामि । यजुर्वेदं तर्पयामि । सामवेदं तर्पयामि । अथर्वणवेदं तर्पयामि । इतिहास पुराणं तर्पयामि ॥ प्राचीनावीति ॥ सोमः पितृमान् यमो अङ्गिरस्वान् अग्निकव्य वाहनादयो ये पितरः तान् पितॄन् तर्पयामि । सर्वान् पितॄन् तर्पयामि । सर्वपितृगणान् तर्पयामि । सर्व पितृपत्नीस्तर्पयामि । सर्व पितृगण पत्नीस्तर्पयामि । सर्व पितृ पुत्रान् तर्पयामि ॥ सर्वपितृगणपुत्रान् तर्पयामि । ऊर्जं वहन्तीरमृतं घृतंपयः कीलालं परिस्रुत स्वधास्थ तर्पयत मे पितॄन् ॥ उपवीती । आचम्य ॥

*ஓம் ஆசம்ய — ஶுக்லாம் பரதரம் + ஶாந்தயே ॥ ப்ராணுயம்ய ॥ மமோபாத்த ஸமஸ்த து³ரித க்ஷயத்³வாரா ஸ்ரீ பரமேஶ்வர ப்ரீத்யர்த்த³ம் ப்ரஹ்ம யக்ஞம் கரிஷ்யே ।*

*ப்ரஹ்ம யக்ஞேன யக்ஷ்யே ॥ வித்³யுத³ஸி வித்³யமே பாப்மாநம்ருதாத் ஸத்யமுபைமி–என்று ஜலத்தை தொட்டு தத்ஸவிதுர் வரேண்யம் । ஓம் । ப³ர்கோ³ தே³வஸ்ய தீ⁴மஹி । ஓம் । தியோயோநः ப்ரசோத³யாத் ॥ ஓம் । தத்ஸா விதுர்வரேண்யம் ப³ர்கோ⁴ தே³வஸ்ய தீ⁴மஹி । ஓம் । தி⁴யோயோநः ப்ரசோத³யாத் ॥ ஓம் । தத்ஸவிதுர்வரேண்*

---

யம் ப4ர்கே3ா தே3வஸ்யதீ4மஹி । தி4யோயோந: ப்ர
சோதயாத் । ஓம் । பூ: । ஓம் । புவ: । ஓம் । ஸுவ: । ஓம்
ஸத்யம் । ஓம் । புருஷ: । ஓம் । பூ4: । பூ4: । ஹோஇ । பூ4: ।
ஹோஇ । பூ4: । ஹாவா । ஏ । ஸுவர்ஜ்யோதி: । ஓம் । பு4
வா: । புவ: । ஹோஇ । பு4வ: । ஹோஇ । பு4வ: । ஹாவா ।
ஏ । ஸுவர்ஜ்யோதி: । ஓம் । ஸுவா: । ஸுவ: । ஹோஇ ।
ஸுவ: । ஹோஇ । ஸுவ: । ஹாவா । ஏ । ஸுவர்ஜ்யோதி: ।
ஓம் । ஸத்யாம் । ஸத்யம் । ஹோஇ । ஸத்யம் । ஹோஇ ।
ஸத்யம் । ஹாவா । ஏ । ஸுவர்ஜ்யோதி: । ஓம் । புருஷா: ।
புருஷ । ஹோஇ । புருஷ । ஹோஇ । புருஷ । ஹாவா ।
ஏ । ஸுவர்ஜ்யோதி: । ஓம் । தத்ஸவிதுர் வரேணியோம் ।
பா4ர்கே3ா தே3வஸ்யதீ4மாஹீ । தி4யோயோந: । ப்ரசோ ।
ஹீம் । ஆ । த3ாயோ । ஆ । ஓம் ।

அக்3நிமீளே புரோஹிதம் யக்ஞஸ்ய தே3வம்ருத்வி-ஜம் । ஹோதாரம் ரத்நத4ாதமம் । ஓம் । இஷேத்வோர்ஜே த்வா வாயவஸ்தே2ா பாயவஸ்த2 தே3வோவஸ்ஸவிதா ப்ரார்பயது ஶ்ரேஷ்டதமாய கர்மணே ॥ ஓம் । அக்4ந ஆயா ஹிவீதயே க்3ருணுநோ ஹவ்ய த3ாதயே । நிஹோதா ஸத்ஸிப3ர்ஹிஷி । ஓம் । ஶந்நோ தே3வீரபி3ஷ்டயே ஆபோ ப4வந்துபீதயே । ஶம்யோரபி4ஸ்ஸ்ரவந்துந: । ஓம் । ஸத்யம் தப: ஶ்ரத்3த4ாயாம் ஜுஹோமி ॥ ஓம் நமோ ப்ரஹ்மணே நமோ அஸ்த்வக்3நயே நம: ப்ருதி2வ்யை நம ஓஷதீ4ப்4ய: ॥ நமோ வாசே நமோ வாசஸ்பதயே நமோ விஷ்ணவே ப்3ருஹதே கரோமி । (இதை மூன்று முறை செய்யவும்.) வ்ருஷ்டிரஸி வ்ருஶ்சமே பாப்மாந ம்ருதாத்ஸத்ய முபாக3ாம் । இத்யுபஸ்ப்ருஶ்ய । தே4வருஷி பித்ரு தர்ப்பணம் கரிஷ்யே । தே3வதீர்த்தே2ந । ப்3ரஹ்மாதயோ யே தே3வா: தாந்தேவாந் தர்ப்பயாமி । ஸர்வாந் தே3வாந் தர்ப்பயாமி । ஸர்வதேவக3ணன் தர்ப்பயாமி । ஸர்வதேவ பத்நீஸ் தர்ப்பயாமி. ஸர்வ தேவகணபத்நீஸ் தர்ப்பயாமி. ஸர்வ தேவபுத்ரான் தர்ப்பயாமி । ஸர்வ தேவகணபுத்ரான் தர்ப்பயாமி । (இவ்வேழும் நுனி விரலால் செய்யவும்.) பூணலை மாலையாகப் போட்டுக்கொண்டு ருஷிதீர்த்தே2ந ॥

---

**ஆனால் பலவகை துன்பங்கள் இருக்கின்றனவே**

க்ருஷ்ண த்[3]வைபாத[3]நாதயோ யே ருஷய: தாந்ருஷீன் தர்ப்பயாமி | ஸர்வான் ருஷீன் தர்ப்பயாமி | ஸர்வ ருஷி கணுன் தர்ப்பயாமி | ஸர்வ ருஷிபத்நீஸ் தர்ப்பயாமி | ஸர்வ ருஷிகணபத்நீஸ்தர்ப்பயாமி | ஸர்வ ருஷிபுத்ரான் தர்ப்பயாமி | ஸர்வ ருஷிகணபுத்ரான் தர்ப்பயாமி || (இவ் வேழும் உட்கையால்விடவும்) உபவீதி || (விரல்நுனியால்) ரிக்வேதம் தர்ப்பயாமி | யஜுர்வேதம் தர்ப்பயாமி | ஸாம வேதம் தர்ப்பயாமி | அதர்வணவேதம் தர்ப்பயாமி | இதி ஹாஸ புராணம் தர்ப்பயாமி || ப்ராசீனுவீதி || பித்ருதீர்த் தேந ஸோம: பித்ருமாந் யமோ அங்கீ[3]ரஸ்வாந அக்[3]நி கவ்ய வாஹநாத[3]யோ யே பிதர: தாந் பித்ரூன் தர்ப்ப யாமி | ஸர்வாந் பித்ரூன் தர்ப்பயாமி | ஸர்வபித்ருகணுன் தர்ப்பயாமி | ஸர்வ பித்ரு பத்நீஸ்தர்ப்பயாமி | ஸர்வ பித்ருகணபத்நீஸ் தர்ப்பயாமி | ஸர்வபித்ருபுத்ரான் தர்ப் பயாமி | ஸர்வ பித்ருகணபுத்ரான் தர்ப்பயாமி | ஊர்ஜம் வஹந்தீரம்ருதம் க்[4]ருதம்பய: கீலாலம் பரிஸ்ருதம் ஸ்வத[4]ா ஸ்த[3] தர்ப்பயத மே பித்ரூன் || உபவீதீ || ஆசமநம் ||

---

## தார்மிகச் செய்திகள்:

**ஸ்ரீசங்கர ஜயந்தி:** சமயத்தில் ஸ்ரீச்ருங்கேரி பரமாசார்யாள் ஒரு வித்வத் ஸபை நடத்தி பலருக்கு சால்வைகளும் ஸன்மாநமும் அளித்தார்கள். மடத்துச் செலவில் நூறு சிறுவர்களுக்கு இலவசமாக உபநயநம் செய்வித் தார்கள். விரைவில் ஒரு தார்மிகப் பத்ரிகையும் நடக்கப்போவதாக அறிகிறோம்.

**சென்னை சங்கர ஜயந்தி:** தம்புசெட்டித்தெரு சங்கரமடம் வேத பாஷ்ய புராண ஸபையில் வழக்கப்படி ப்ரஸ்தாநத்ரய வேதத்ரய பாராயணமும் தலைவர் உபன்யாஸமும நடைபெற்றன. ஜயந்தியன்று மடத்து ப்ரஸா தத்தை ஸபைத் தலைவர் சர்மா கார்யதர்சியுடன் சென்று நேரில் மஹா ஸன்னிதாநத்திற்களித்து வந்தார்.

**நூம்பலில் ஸ்ரீ ஜகத்குரு நடத்திய ஜயந்தி:** ஸ்ரீ பரமாசார்யாளின் ரத்ந பாதுகையை வாத்ய கோஷங்களுடன் அருகிலுள்ள நதிக்கு ப்ரதக்ஷிண மாக எடுத்துச்சென்று ஆங்கு திவ்யாபிஷேக பூஜை நைவேத்ய தீபாராதனை நடத்தி அருகிலுள்ள கிராமங்களில் பிரதக்ஷிணமாக ஐந்து நாள் எடுத்துச் சென்றனர். கூடவே நடந்துவந்து பூஜைசெய்து ஆசார்ய பக்தியை பரமா சார்யாள் விளக்கி ஒரு உபன்யாஸமும் செய்தார்.

**உபன்யாஸம்:** சீர்காழி தாடாளன் ஸந்நிதி ஸ்ரீ திருவிக்ரம நாராயண பெருமாள் ப்ரும்மோத்ஸவத்தில் 23—5—59 சனிக்கிழமையன்று நமது பத்ராசிரியர் அவர்களின் குமாரர் சென்னை ஸ்ரீ S. ஜயராமன், M. A. அவர்க ளால் "ஸ்ரீ கிருஷ்ணன் தூது" உபன்யாஸமும், மறுநாள் "ஸ்ரீநாராயணீயம்" உபன்யாஸமும் வெகு சிறப்பாக நடந்தது.

---

**அந்த ஆத்மாவை அறியாதிருப்பதால்தான்**

# தைத்திரீய உபநிஷத்.

ப்ருகுவல்லி 10-ம் அநுவாகம்.—*வைகாசியீ தொடர்ச்சி.*

**एतद्वै मुखतो ऽन्नꣳराद्धम्। मुखतो ऽस्मा अन्नꣳराध्यते। एतद्वै मध्यतोऽन्नꣳराद्धम्। मध्यतो ऽस्मा अन्नꣳराध्यते। एतद्वा अन्ततो ऽन्नꣳराद्धम्। अन्ततोऽस्मा अन्नꣳराध्यते। यएवं वेद।**

**एतद्वै** இந்த அன்னமானது **मुखतः** முதலில் **राद्धं** செய்யப்பட்டது. **अस्मै** இவருக்காக **मुखतः** முதலில் **अन्नं** அன்னமானது **राध्यते** செய்யப்படுகிறது. **एतद्वै** இந்த **अन्नं** அன்னம் **मध्यतः** நடுவில் **राद्धं** செய்யப்பட்டது. **अस्मै** இவருக்காக **मध्यतः** நடுவில் **अन्नंराध्यते** அன்னம் செய்யப்படுகிறது. **एतद्वै अन्नं** இந்த அன்னமானது **अन्ततः** கடைசியில் **राद्धं** செய்யப்பட்டது. **अन्ततः** முடிவில் **अस्मै** இவர் பொருட்டு **अन्नं** அன்னமானது **राध्यते** செய்யப்படுகிறது. **यः** எவன் **एवं वेद** இம்மாதிரி அறிகிறுனே.

முக்யமான தீர்த்தம் க்ஷேத்ரம் முதலிய இடத்தில் முக்யமான ஸங்க்ராந்தி, அமாவாஸ்யை போன்ற காலத்தில் முக்யமான வேத சாஸ்த்ரமறிந்து அனுஷ்டிக்கும் ப்ராம்மணருக்கு ஸாத்விக எண்ணம் பூஜை முதலியவைகளுடன் நாம் அன்னமளிக்கவேண்டும். மத்யமமாகவாவது அதமமாகவாவது அன்னமளிக்கவேண்டும். முக்ய மத்ய அந்த என்பவைகளுக்கு உத்தம, மத்யம, அதமம், ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என ஸாயணுசார்ய பாஷ்யமாம்.

இளமைப் பருவத்தில் அல்லது நடு வயதில் அல்லது கிழ வயதில் அன்னதானம் செய்தால் அது அதேபோல் அந்தந்த காலத்தில் நமக்குக் கிடைக்கும் என மற்றோர் பாஷ்யம். முக்ய மத்ய அந்த என்பதற்கு அது பொருள்.

---

**அக்ஞானி பலனை நாடி கர்மா செய்கிறுன்.**

क्षेम इति वाचि। योग क्षेम इति प्राणापानयोः। कर्मेति हस्तयोः। गतिरिति पादयोः। विमुक्तिरिति पायौ। इति मानुषीः समाज्ञाः॥

**वाचि** வாக்கில் **क्षेमः इति** க்ஷேமம் என்றும் **प्राणापानयोः** ப்ராணாபானங்களில் **योगक्षेमः इति** யோகக்ஷேமம் என்றும் **हस्तयोः** கைகளில் **कर्मेति** கர்ம என்றும் **पादयोः** கால்களில் **गतिरिति** நடை என்றும் **पायौ** மலத்வாரத்தில் **विमुक्तिरिति** விடுதல் என்றும் **इति** இம்மாதிரி **मानुषीः** மனுஷ்ய தேஹத்தில் ஏற்பட்ட **समाज्ञाः** உபாஸனை.

இங்கு சில உபாஸனைகள் கூறப்படுகின்றன. வாக் இந்த்ரியத்தில் க்ஷேமரூபமாக ப்ரஹ்மா இருக்கின்றார் என்று உபாஸிக்கவேண்டும். அதேபோல் மற்ற அவயவங்களிலும் அந்தந்த வடிவமான ப்ரஹ்மம் இருக்கின்றது என உபாஸிக்கவேண்டும். க்ஷேமம் என்பது கிடைத்த பொருளை ரக்ஷிப்பதாம். யோகம் என்பது புதிதாக ஒரு பொருளைப் பெறுவதாம். உள்ளே காற்றை இழுப்பது வெளியில் விடுவது என்பது ப்ராணாபானங்களுக்கும் அவைகளில் ப்ரஹ்மா யோகக்ஷேம ரூபமாக இருக்கிறார் என்றும் கைகளில் ஹோமம் செய்தல் முதலிய கர்ம ரூபி என்றும், கால்களில் நடைரூபி என்றும், மலத்வாரத்தில் விடுவது ரூபி என்றும், மனுஷ்ய உடலில் உபாஸிப்பது மானுஷ உபாஸனையாகும்.

अथ दैवीः। तृप्तिरितिवृष्टौ। बलमिति विद्युति। यश इति पशुषु। ज्योतिरिति नक्षत्रेषु। प्रजातिरमृत मानन्द इत्युपस्थे। सर्वमित्याकाशे।

---

**अथ** பிறகு **दैवीः** தேவ ஸம்மந்தமான உபாஸனைகள் **वृष्टौ** மழையில் (அபிமான தேவதையினிடம்) **तृप्तिः** த்ருப்தி ரூபமானவர். **विद्युति** மின்னல் தேவதையிடம் **बलमिति** பலமென்றும் **पशुषु** பசு தேவதைகளிடம் **यशः इति** யஶோ ரூபிஎன்றும் **नक्षत्रेषु** நக்ஷத்ரங்களில் **ज्योतिः इति** ஜ்யோதி ஸ்வரூபமாகவும் **प्रजातिः** புத்ரனை உண்டுபண்ணுதல் **अमृतं** ஸ்த்ரீகளுடன் க்ரீடை **आनन्दः** ஆனந்தம் என்று **उपस्थे** ரஹஸ்யமான இந்த்ரியத்திலும் **आकाशे** ஆகாஶத்தில் **सर्वमिति** எல்லா வடிவமாகவும்ப்ரஹ்மமிருக்கின்றார் என்றும்.

தெய்விகமான உபாஸனையைக் கூறும்பொழுது வ்ருஷ்டிதேவதையினிடம் த்ருப்தி ரூபமாக ப்ரஹ்மமிருக்கின்றது. மழையால் ஸகல ப்ராணிகளும் திருப்தியடைவதால் வ்ருஷ்டியில் த்ருப்தி என ப்ரஹ்மத்தை உபாஸிக்கும்படி கூறிற்று. அதேபோல் மின்னல் பலரூபமாகவும் பசுதேவதைகளில் கீர்த்திரூபமாகவும், நக்ஷத்ர தேவதைகளிடம் ஜ்யோதி ரூபமாகவும் ஜல விஸர்ஜனம் செய்யும் இந்த்ரியத்தில் புத்ரோத்பத்தி ரூபியாகவும், ஸ்த்ரீகளுடன் ரமிக்கும் அம்ருதமாகவும், குஹ்யேந்த்ரிய சேர்க்கையினால் உண்டாகும் ஆனந்தரூபியாகவும், ஆகாசத்தில் ஸமஸ்த வஸ்து ரூபமாகவும் ப்ரஹ்மம் இருக்கிறது என உபாஸிக்கவேண்டும்.

**तत्प्रतिष्ठेत्युपासीत । प्रतिष्ठावान्भवति । तन्मह इत्युपासीत । महान्भवति । तन्मन इत्युपासीत । मानवान्भवति । तन्नम इत्युपासीत । नम्यन्तेऽस्मै कामाः । तद्ब्रह्मेत्युपासीत । ब्रह्मवान् भवति । तद्ब्रह्मणः परिमर इत्युपासीत । पर्येणं म्रियन्ते द्विषन्तः सपत्नाः । परि येऽप्रिया भ्रातृव्याः ॥**

---

உடல் சுப அசுப பலனை இன்பதுன்பங்களையடைகிறது.

**तत्** அந்த ப்ரஹ்மத்தை **प्रतिष्ठा** ப்ரதிஷ்டை என்று **उपासीत** உபாஸிக்க வேண்டும். **प्रतिष्ठावान्** ப்ரதிஷ்டை உள்ளவனாக **भवति** ஆகிறான். **तत्** அந்த ப்ரஹ்மத்தை **मह इति** பெரியது என்று **उपासीत** உபாஸிக்கவேண்டும். **महान्** சிறந்தவனாக **भवति** ஆகிறான். **तत्** அந்த ப்ரஹ்மத்தை **मनः इति** மனஸ் என்று **उपासीत** உபாஸிக்கவேண்டும். **मानवान्** மனஸ் சக்தியுள்ளவனாக **भवति** ஆகிறான். **तत्** அதை **नम इति** வணக்கம் என்று **उपासीत** உபாஸிக்க வேண்டும். **अस्मै** இவ் வுபாஸகனுக்கு **कामाः** இஷ்டம் **नम्यन्ते** ஸ்வாதீனமாகிறது. **तत्** அதை **ब्रह्म** வேதம் என்று **उपासीत** உபாஸிக்கவேண்டும். **ब्रह्मवान्** வேதமுள்ளவனாக **भवति** ஆகிறான். **तत्** அதை **ब्रह्मणः** ப்ராஹ்மணனுடைய **परिमरः** சத்ருவின் ம்ருத்யு **इति** என்று **उपासीत** உபாஸிக்க வேண்டும். **एनं परि** உபாஸகனுக்கு நாலு புறமுமுள்ள **द्विषन्तः** த்வேஷிகளான **सपत्नाः** விரோதிகள் **म्रियन्ते** இறக்கின்றார்கள். **परि** நான்குபுறத்திலும் **ये** எவர்கள் **अप्रियाः** விருப்பமில்லாத **भ्रातृव्याः** சத்ருக்களோ அவர்களும் **म्रियन्ते** இறக்கிறார்கள்.

கீழ்க்கூறிய உபாஸனைகளுடன் மற்றும் சில உபாஸனைகளைக் கூறி அவைகளின் பலனையும் உபநிஷத் கூறுகிறது. ப்ரஹ்மம் என்றும் ஸ்திரமாய் இருக்கின்றது என உபாஸிப்பவன் உலகில் ஸ்திரமாக விருப்பான். ஜீவனத்திற்கு வேண்டிய தன, தான்யமும் கிடைக்கும். ப்ரம்மம் மஹத் என்ற குணமுள்ளது என உபாஸித்தால் வீடு, பசு முதலிய ஸம்ருத்தி உள்ளவனாகவிருப்பான். மனன (நினைக்கும் சக்தியுள்ளது) ப்ரம்மம் என்று உபாஸித்தால் நினைக்கும் சக்தி நிறைந்தவனாக விருப்பான். பிரம்மம் வசீகரண சக்தியுள்ள வணக்க முள்ளதென உபாஸித்தால் உபாஸகனுக்கு ஸகலவிதமான இஷ்டங்களும் ஸ்வாதீனமாகும்.

---

## நல்வழி.

தியாகோபநிஷத்.

ஸத்கதாம்ருத கலாநிதி
T. S. பாலகிருஷ்ணசாஸ்த்ரி.

மனிதன் தன் குழந்தைப் பருவத்தில், தன் மழலைச் சொல்லால் புரியாத பாஷையில் நாக்கை வளைத்துத் தன் உறவினர் களிக்கப் பேச ஆரம்பித்ததிலிருந்து, தன் அந்திய காலத்தில், கண் மூடுகிற சமயத்தில், நாக்கிழுக்க, உறவினர் கூடிக் கதற, அதேபோல் புரியாத பாஷையில் பேசி முடிக்கும்வரை, இடையே எத்தனை பேச்சுக்கள் இவன் பேசி இருக்கிறுன் என்று சிந்தித்திருப்பானு! அல்லது குறிப்புதான் வைத்துக்கொண்டிருப்பானு! அந்தப் பேச்சில் உபயோகமுள்ளவை எத்தனை? அன்பு கனியப் பேசினவை எப்பொழுது? அதிகமானவை பய னில்லாத சொற்களாகவே வெளிவந்திருக்கும். இவன் பேச்சே, இவனுக்குத் துன்பமாக விளைவதும் உண்டு. [புத்தியின் சக்தி எண்ணங்களை வேகமாகத் தள்ளுகிறது. எண்ணங்களின் எழுச்சியினுல், காரியத்தில் சக்தி தூண்டப் படுகிறது. புத்தி சக்திக்கும் காரிய சக்திக்கும் இடையே பேச்சு உதயமாகிறது.] தன் ஜன்மாவில் ஒருவன் பேசா மலே இருந்துவிடலாம் என்றுல் முடிகிறதில்லை. அப்படிப் பேசாமலிருக்கப்பழகினுலும், புத்தியின் சக்தியால் அதன் விளைவான காரிய சக்தியை அடக்கி ஆள முடியவில்லை. அனுஷ்டிக்க வேண்டியதை விட்டுவிட்டும், விடவேண்டிதை அனுஷ்டித்தும் திண்டாடுகிறுன். இதற்கு ஒரு பழக்கம் ஆதியில் ஏற்படுத்திக்கொண்டால் நமக்கு நல்லது என்று ஸ்ரீ ஸத்குரு தியாகராஜ ஸ்வாமிகள் அபிப்பிராயங் கொண்டு கீழ்க்கண்ட கீர்த்தனத்தின் மூலம் விளக்குகிறுர்.

ராகம்: அடாணு] பல்லவி [தாளம்: ஆதி

செடே புத்தி மானுரா — (செ)

அனுபல்லவி

இடே பாத்ர மெவரோ சூடரா — (செ)

சரணம்

பூ வாஸிகி தகு பலமு கலுகுனனி
புதுலு பல்க வினலேதா மனஸா

---

ஸத்குருவை அடைந்து உபதேசம் பெறு.

ஸ்ரீ வாஸுதேவ ஸர்வ மனுசுனு
சிந்திஞ்சர தியாகராஜ வினுதுனி — (செ)

பொருள்—வீணான விஷயங்களில் புத்தியை (செலவிட) வேண்டாமடா! பாத்திர மறிந்து கொடுக்கத் தகுந்தவர்கள் யாரோ அவர்களைப்பார்த்துக் கொடுப்பாயடா.

பூலோகத்தில் வஸிக்கப் பிறந்தவனுக்கு அவன் செய்த வினைப் பயன்படி (தானே எல்லாம்) கிடைக்கும் என்று வித்வான்கள் சொல்லக் கேட்கவில்லையா? (ஆதலின்) ஏ மனமே! ஸ்ரீ வாஸுதேவனே எல்லாம் என்ற அறிவுபெற்று, அவனை சிந்தித்துத் துதித்துக்கொண்டிரு.

கருத்து — ஏ மனமே! ஒரு பொருளை ஒருவனுக்குத் தானம் செய்யும்பொழுது எப்படி அவன் தகுதியைக் கருதிச் செய்வாயோ, அதேபோல் உன் புத்தியையும் அறிந்து செலவிடு. (அற்ப விஷயங்களில் பழக்கம், புத்தியை மாசடையச் செய்து பிறகும் தவறான வழிகளிலேயே இழுத்துச் செல்லும்.) எல்லாம் அவனவன் கர்மாவின்படி நடக்கும் என்று யாரும் பேசாமலிருப்பதில்லை. புத்தியை மனத்தின் போக்கில் இழுத்துவிட்டு இன்னும் அதிக துன்பம் சுமக்கச் செய்கிறான். [அதற்கு ஓர் உபாயம் சொல்லுகிறேன். கற்றுத் தெளிந்தவர்கள் கண்ட உபாயம் அது.] எல்லாம் ஆண்டவன் மயமாகப் பார்க்கிறவன் எவனோ, அவனுக்கு (அவன் ஞானி, முழு மௌனி) எல்லாம் இன்பமே! என்றும் இன்பமே! அந்த மஹாத்மா மிகவும் துர்லபன். அவனைப்போல் நாமிருக்க நினைத்தால் எளிதல்ல. முதிர்ச்சியும், பரிபக்குவமும் அடையாமல் 'எல்லாம் வாஸுதேவ மயம்' என்று சொல்லிக் கொண்டிருப்பவர்க்கு விபரீத ஞானம் விளைவு.

முதல்படி; உன் பேச்சை அடக்கி அளவாகச் செலவிடு. (அதற்காக உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாதே.) எண்ணங்களை குறைத்துக்கொள்; அதிக ஆசைகளுக்கு இடம் கொடாதே. உன் செய்கைகள், நல்லமுறையில் (விதிக்கப்பட்டவைகளே செய்வதாக) அமையட்டும்.

இரண்டாவதாக; பகவான் யார் என்று தெரிந்து கொள்ள அவனுடைய குணமயமான, இனிய கதைகளை

---

**அவர் கூறியபடி பிரணவாதி உபாஸனை செய்.**

விச்வாஸத்துடன் கேள். அவனுடைய திருநாமங்களை சொல்லி நாக்கையும் மனத்தையும் சுத்தப் படுத்திக் கொள். எதை நினைத்தாலும், அப் பரம் பொருளின் நினைவே முதன்மையாக நிற்கட்டும். எந்த நற்செய்கை யிலும் அப்பெருமானே முன்னிற்கட்டும்.

மூன்ருவதாக; பெரியோர்களை அணுகி, உன் சிற்றறிவைப் பெருக்கி. பரமனின் அருள்பெற வழிதேடு. இந்த ஜன்மா வீண்போகாது.

---

## ஆனிமாத கோசாரப் பலன்.

ஜோதிஷப் பகுதி.

ஜோதிஷபானு E. S. K. ஸ்வாமி, பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்.

### மேஷ ராசி

அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய

இம் மாதம் 8வ வரை குரு அஷ்டமத்திலும், பின் வக்ரமாய் ஸப்தமத்திலும் இருக்கிருர். சனி பாக்யத்தில் வக்ரம். ராகு ஆறிலும், கேது விரயத்திலும் இருக்கிருர்கள். சூரியன் மூன்றில் இருக்கிருர். இதனல் தன நடப்பில் சிக்கல் ஏற்பட்டு நீங்கும். தொழிலில் சிலருக்கு புதிய முன்னேற்றம் உண்டாகும். வெளியூர் போய்வர நேரும். சிலபொருள்கள் விற்கும்படியாகும். உத்தியோகத்தில் சிலருக்கு இடமாற்றம் உண்டாகும். சுபவிஷயமாய் செலவுகளும் ஏற்படுவதாகும். சுப்ரமண்யருக்கு அஷ்டோத்திரம் செய்வது நன்மையாகும்.

### ரிஷப ராசி

கிருத். 2ம் பாதம் முதல் ரோகிணி மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய

குரு ஸப்தமத்தில் 8உவரை இருந்து பின் ஆருமிடம் வருகிருர். சனி அஷ்டத்திலும், ராகு பஞ்சமத்திலும், கேது லாபத்திலுமிருக்கிருர்கள். சூரியன் தனத்தில் இருக்கிருர். தன நடப்பில் பிறர் சகாயத்தை எதிர்பார்க்கும்படி யாகும். புதிய முயற்சிகளுக்குத் தடையுண்டாகும். உத்தியோகத்தில் திருப்தி யான போக்கு இராது. செய்தொழிலில் சில சிக்கல் ஏற்பட்டுவரும். சில்லரைக் கடன்களால் நச்சரிப்பு உண்டாகும். சுபஸம்பந்தமான சிலவுகளுண்டாகும். ஆரோக்ய ஸம்பந்தமாய் வேலையும் ஏற்படும். பிரதி வெள்ளிக்கிழமையும் லலிதாஷ்டோத்திரம் செய்வது நலம்.

### மிதுன ராசி

மிருக. 3ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்வசு 3ம்பாதம் முடிய

குரு ஆறில் 8உவரை இருந்து பின் பஞ்சமத்திற்கு வருகிருர். சனி ஏழிலும் ராகு நான்கிலும், கேது பத்திலுமிருக்கிருர்கள். சூரியன் ராசியில் இருக்கிருர். தொழில் முன்னேற்றத்திற்குச் சில தடங்கல்கள் ஏற்பட்டு பின் கூடும். குடும்ப நடப்பில் சுகக்குறைவு ஏற்பட்டு வரும். உத்தியோகத்தில் அதிகாரிகளிடம் ஆதரவு உண்டாகும். வெளியூரிலிருந்து நல்ல சேதி கேள்விப்படும்படி யாகும். சிலருக்குப் பந்து விரோதம் ஏற்படும். மேலோர் சினேகம் உண்டாகும். மஹா விஷ்ணுவை அபிஷேக அர்ச்சனைகளால் திருப்திசெய்வது நன்மையாகும்.

---

**உலகப் பற்றைக் குறை! ஆத்ம பற்றை வளர்.**

## கடக ராசி

### புனர்வசு 4ம் பாதம் முதல் புஷ்பம், ஆயில்யம் முடிய

குரு 8உ வரை பஞ்சமத்திலும் பின் நாலிலும் வருகிறர். சனி ஆறிலும், ராகு மூன்றிலும், கேது பாக்கியத்திலுமிருக்கிறர்கள். சூரியன் விரயத்தி லிருக்கிறர். இதனல் செய் தொழிலிலும் உத்தியோக வகையிலும் சிலசிக்கல்களும், மனவேதனையும் உண்டாகும். ஆரோக்யக் குறைவு ஏற்படும். தன நடப்பில் சிறிது சௌகரியக் குறைவும், வீண் செலவுகளும் ஏற்படும். புதிய முயற்சிகள் கூடிவரும். குடும்ப நடப்பில் சௌக்கியமும், சிலர் விரோதமும் ஏற்பட்டுவருவதாகும். துர்க்கைக்கு ஜபம் செய்து வருதல் நன்மை.

## சிம்ம ராசி

### மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய

குரு 8உ வரை நான்கிலிருந்து பின் மூன்ருமிடம் வருகிறர். சனி பஞ்சமத்திலும், ராகு தனத்திலும், கேது அஷ்டமத்திலும் இருக்கிறர்கள். சூரியன் லாபத்திலிருக்கிறர். இதனல் அலேச்சலும், வெளியூர் பிரயாணமும் ஏற்படும். புதிய வருமானம் தடைப்படும். குடும்பச் செலவுகள் அதிகமாகும். தொழிலில் நிதானமும், உத்தியோகத்தில் ஸம நிலேயும் ஏற்பட்டுவரும். சிலர் பிறர் சகாயத்தை எதிர்பார்க்க நேரும். பந்துக்களால் கவலேயும் ஏற்படுவதாகும். ஆதித்ய ஹிருதயம் பாராயணம் செய்துவர நன்மை.

## கன்னியா ராசி

### உத்திரம் 2ம் பாதம் முதல் ஹஸ்தம் சித்திரை 2ம் பாதம் முடிய

குரு 8உ வரை மூன்றிலிருந்து பின் தனத்திற்கு வருகிறர். சனி நான்கிலும் ராகு ராசியிலும், கேது ஏழிலுமிருக்கிறர்கள். இதனல் பழைய சிக்கல்கள் சில தீர்ந்து வரும். வரவேண்டிய பணம் தடைப்பட்டு வரும். ஆரோக்ய ஸம்பந்தமாய் கவலே ஏற்பட்டு வரும். குடும்ப செலவுகள் அதிகமாகும். சிலர் பகை உண்டாகும். சில்லரைக் கடன்கள் நீங்கிவரும். சினேகிதரால் நன்மை ஏற்பட்டு வரும். சில பொருள் வாங்கும்படி யாகும். பிறர் சகாயம் உண்டாகும். விஷ்ணு ஸஹஸ்திர நாம பாராயணம் செய்வது நன்மை.

## துலா ராசி

### சித். 3ம் பாதம் முதல் சுவாதி விசாகம் 3ம் ப்ாதம் முடிய

குரு 8உ வரை தனத்திலிருந்து பின் ராசிக்கு வருகிறர். சனி மூன்றிலும் ராகு விரயத்திலும், கேது ஆறிலுமிருக்கிறர்கள். சூரியன் பாக்கியத்திலிருக்கிறர். இதனல்; முயற்சிகள் கைகூடும். சிலருக்கு இருப்பிடம் மாறும்படியாகும். வெளியூர் பிரயாணமும் ஏற்படும். அலேச்சல் காரியங்களில் ஈடுபடும்படியாகும். சுபவிஷயமாய்ச் செலவுகள் ஏற்படும். பிறர் உதவியை எதிர்பர்க்கும்படியாகும். உத்தியோகத்தில் மாற்றமுண்டாகும். சிலருடன் விரோதப்படவும் நேரும். லக்ஷ்மீ பூஜை பிரதிவாரமும் செய்ய நலம்.

## விருச்சிக ராசி

### விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம் கேட்டை முடிய

குரு 8உ வரை ராசியிலிருந்து பின் விரயத்திற்கு வருகிறர். சனி இரண்டிலும், ராகு லாபத்திலும், கேது பஞ்சமத்திலுமிருக்கிறர்கள். சூரியன் அஷ்டமத்தில் இருக்கிறர். இதனல்; சுபகாரியங்களில் செலவுகள் உண்டாகும். வீண் விவாதங்களில் கவலே உண்டாகும். செய் தொழிலில் திருப்திக் குறைவும்,

அலைச்சலும் ஏற்படும். சில பொருள் விற்கும்படியாகும். உத்தியோகத்தில் முன்னேற்றத்திற்குத் தடை உண்டாகும். வெளியூர் சேதிமூலம் சில வருத்தம் உண்டாகும். எதிலும் திருப்திக் குறைவான நடப்பு ஏற்பட்டுவருவதாகும். சுப்ரமண்யருக்குப் பால் அபிஷேகம் செய்வது நலம்.

## தனுர் ராசி

### மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய

குரு 8உவரை விரயத்திலும் பின் லாபதிற்கும் வருகிறார். சனி ராசியிலும், ராகு பத்திலும், கேது சுகத்திலுமிருக்கிறார்கள். சூரியன் ஸப்தமத்திலிருக்கிறார். இதனால், குடும்பச் செலவுகள் அதிகமாகும். சிலருக்கு சுபம் கூடி நடக்கும். செய் தொழிலில் புதிய முன்னேற்றம் உண்டாகும். உத்தியோகத்தில் சிலருக்கு அனுகூல் மாற்றமுண்டாகும். பந்துக்களால் சிறிது கவலை ஏற்பட்டு விலகும். தேகசுகம் ஸாமான்யமாய் பாதிக்கும். சில பொருள் வாங்க நேரும். மேலோர் ஆதரவு ஏற்படும். தக்ஷிணாமூர்த்தி அஷ்டோத்ரம் பாராயணம் செய்வது நலம்.

## மகர ராசி

### உத்திரா. 2ம்பாதம் முதல் திருவோணம், அவிட். 2ம்பாதம் முடிய

குரு 8உவ்வரை லாபத்திலும் பின் ஜீவனத்திலும் வருகிறார். சனி விரயத்திலும், ராகு பாக்கியத்திலும், கேது மூன்றிலும் இருக்கிறார்கள். சூரியன் ஆறில் இருக்கிறார். இதனால், விவாதவிஷயங்கள் அனுகூலமாகும். புதிய முயற்சிகள் கூடிவரும். செய்தொழிலில் திருப்தி குறைவாயினும் வருமானம் ஏற்பட்டு வரும். சிலருக்கு உத்தியோகத்தில் புதிய மாற்றமும், ஏற்பாடுகளும் உண்டாகும். குடும்ப நடப்பில் கவலையும், திருப்திக்குறைவும் ஏற்பட்டு வருவதாகும். புதிய சிநேக விர்த்தி உண்டாகும். சனிக்கு அஷ்டோத்ரம் செய்ய நன்மை.

## கும்பராசி

### அவிட்டம் 3ம் பாதம் முதல் சதயம், பூரட். 3ம் பாதம் முடிய

குரு 8உ வரை ஜீவனத்திலிருந்து பின் பாக்கியத்திற்கு வருகிறார். சனி லாபததிலும், ராகு அஷ்டமத்திலும், கேது தனத்திலும் இருக்கிறார்கள். சூரியன் பஞ்சமத்தில் இருக்கிறார். இதனால், புதிய வகை முயற்சிகளில் சில அனுகூலமும், பிறர் சகாயமும் ஏற்படும். வெளியூர் பிரயாணமும், பெரியமனுஷ்யர்கள் ஆதரவும் ஏற்படும். சிலருக்கு உத்தியோகத்தில் மாற்றம் ஏற்படும். செய்தொழிலில் முன்னேற்றத்திற்குறிய சில அறிகுறிகள் ஏற்படும். குடும்ப நடப்பில் திருப்தி இராது. துர்க்கா பூஜையும் அபிஷேகமும் செய்வது நலம்.

## மீன ராசி

### பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்திரட்டாதி, ரேவதி முடிய

குரு 8உ வரையில் பாக்கியத்திலும் பின் அஷ்டமத்திற்கும் வருகிறார். சனி பத்திலும், ராகு ஏழிலும், கேது ராசியிலும் இருக்கிறார்கள். சூரியன் சுகத்திலிருக்கிறார். இதனால், செய்தொழில்களில் மனதிற்குத் திருப்திக் குறைவு ஏற்பட்டு வரும். சுபவிஷயங்கள் கேள்விப்பட நேரும். குடும்ப நடப்பில் சில கவலை ஏற்பட்டு நீங்கும். சிநேக நன்மை ஏற்பட்டுவரும். வீண் வகையிலும், தெய்வ காரியங்களிலும் சிறிது செலவு செய்யும்படி யாகும். பிரதி வியாழக்கிழமையிலும் ஒருவருக்கு ஆகாரம் போட்டுவர நன்மையாம்.

---

**உலக ஸுகம் அநித்யம், துக்க மயம் என நினை.**

## ஸ்ரீ காமகோடி ஸதுபதேசம்.

**ஸ்ரீ சங்கர ஜயந்தி:** ஸ்ரீராமநவமி கிருஷ்ணஷ்டமி நவராத்ரி போல் இது ஒரு பெரும் புண்ணியகாலம். சங்கரர் அவதரித்த திதி பக்ஷம் மாதம் மூன்றும் சங்கர என்பதிலேயே அமயப் பெற்றது. வைசாக சுத்த பஞ்சமி அவதார திநம். வஸந்தரிது இது. இப்போது மல்லிகை மலரும். அதன் நிறமும் வாஸனையும் சிறந்தது. ஸத்வகுண வெண்ணிற மிருப்பதால் சிவனும் மல்லி கேச்வரர் எனப்படுகிறார். ஸ்ரீசைலத்தில், மத்யார்ஜுநத்தில், கேரளத்தில் இப்பெயருடனிருக்கிறார் பகவான்.

அந்த சிவனது அவதாரமான ஆசார்யாள் உலகிற்கும் க்ஷேமத்தை உண்டுபண்ணியதால் சங்கரர் எனப்படுகிறார். அவர் துர் மதங்களை அகற்றி வைதிக ஷண்மதங்களையும் அத்வைதத் தையும் நிலைநாட்டியிராவிடில் நாம் ஸ்ரீ ராமநவமி முதலியவைகளைக் கொண்டாட முடியாது. பரமாசார்யாள் காட்டிய அத்வைதமே ஆநந்தம் என தற்கால விக்ஞானிகளும் கூறுகின்றனர்.

---

**ஸ்ரீ ராம பட்டாபிஷேகம்:** கல்கத்தா நாஷனல் ஹை ஸ்கூலில் 15—4—59 முதல் முடிகொண்டான் ஸ்ரீ S. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் அவர்களால் ப்ரவசனம் செய்யப்பட்டுவந்த ஸ்ரீமத் ராமாயண உபந்யாஸம் 3-5-59 அன்று கல்கத்தா திருப்புகழ்மணி அவர்களின் கோஷ்டி மங்கள கீதத் தில் ஆரம்பித்து இரவு 9-மணிக்கு ஷ சாஸ்திரிகள் அவர்களால் ஸ்ரீ ராம பட்டாபிஷேக உபந்யாஸம் முடிவடைந்தது. ஸ்ரீ காஞ்சி ஆசார்யாள் அநுப்பிய பிரஸாதம் எல்லோருக்கும் விநியோகிக்கப்பட்டது.

**கல்கத்தாவில் ஸ்ரீ சங்கர ஜயந்தி:** (8—5—59 to 12—5—59) தென்னிந்திய பஜனை சமாஜத்தாரால் ஸ்ரீசங்கரஜயந்தி விசேஷமாக ஐந்து நாட் கள் கொண்டாடப்பட்டது. காலையில் மஹான்னியாச ஏகாதச ருத்திர ஜப அபி ஷேகத்துடன், மாலை பிரம்மஸ்ரீ முடிகொண்டான் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் அவர்கள் "சங்கர சரிதம்" பற்றி உபன்னியாசம் செய்தார்.

**கல்கத்தா தேவவாணி பரிஷத்** சார்பில் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சாஸ் திரிகளுக்கு **विद्या वाचस्पतिः** என்ற பட்டம் அளிக்கப்பட்டது.

**பலவிடங்களில்** ஷ ஜயந்தி மிகச்சிறப்பாக நடத்தினர். கோபாலபுரம் ஜநாவரம், ப. மாம்பலம் ஆகிய இடங்களில் நமது ஆசிரியர் உபன்யஸித்தார்.

**புனாவில் ஸ்ரீ சங்கர ஜயந்தி:** ராஸ்தாஸ்பெட் ஹரிஹர பஜனை ஸமா ஜத்தின் ஆதரவில் ஒரு வாரம் சங்கர ஜயந்தி விழா கொண்டாடி கடைசிநாள் ஆதிசங்கருடைய படத்தை ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டது. இவ் விழாவையொட்டி ஸ்ரீ T. S. ராமஸ்வாமி அய்யரால் தனிமலர் ஒன்றும், ஆதி சங்கரர் அருளிச்செய்த கனகதாரஸ்தவமும், அன்னபூர்ணஷ்டகமும் பக்தர்க ளுக்கு வழங்கப்பட்டது.

---

**கூடியவரை ஸதா ஆத்ம விசாரம் செய்**

# யம கீதை.



## விஷ்ணு புராணம்.

யமதர்மராஜன் தனது கிங்கரர்களுக்குக் கூறியதை களிங்கர் பீஷ்மருக்குக் கூற, பீஷ்மர் தர்மருக்கும், அவர் நகுலனுக்கும் கூறியதாக பராஶரர் மைத்ரேயருக்குக் கூறினர்.

பாஶக்கயிற்றைக் கையிலெடுத்துக்கொண்டு ஆயுஸ் முடிந்தவர்களைக்கொண்டு வருவதற்காகப் புறப்படும் கிங்கரர்களிடம் காதோடு ரஹஸ்யமாகக் கூறினர் யமதர்மர்.

யமன்: மதுஸூதநனைச் சரணம் அடைந்தவர்களிடம் செல்லாதீர்கள்! விஷ்ணு பக்தி உள்ளவர்களைச் சிக்ஷிக்க முடியாது. நான் அதிகாரியல்ல.

தேவர்களால் பூஜிக்கப்படும் பிரும்மா, உலக நன்மைக்காகப் பாபிகளைச் சிக்ஷிக்கும்படி எனக்கு அதிகாரம் அளித்தார். என்னை — தவறு செய்தால் — சிக்ஷிப்பவர் மஹா விஷ்ணுவே ஆவார்.

கிரீடம், குண்டலம் என்ற பெயர்களாலும் உருவங்களாலும் வேறுபட்டிருந்தாலும் அவை ஸுவர்ணமேயாகும். அப்படியே தேவர் நரர் பஶு முதலிய பற்பல ஜீவராஶிகளாகக் காணப்பட்டாலும் எல்லாம் ஒன்றுன விஷ்ணுவால் படைக்கப்பட்டு விஷ்ணுமயமே யாம்.

ஒரு பெருங்காற்று அடித்தால் பூமியிலுள்ள குப்பை புழுதிகள் எல்லாம் ஒன்றாக பூமியில் சேருவதுபோல் தமோகுணம் கிளம்பிய போது ஸமஸ்த வஸ்துக்களும் பிரும்மத்தினிடம் வந்துகூடும், பிரளய காலத்தில் எல்லாம் பரமனிடமே லயமாகும்.

விஷ்ணு சிறந்த தேவர்களாலும் பூஜிக்கப்படுபவர். அவரை அந்தரங்க பக்தியுடன் பணிபவன் விதிப்படி ஆஜ்யத்தால் ஹோமம் செய்யப்பட்ட அக்நிபோல் ஆவான். கிங்கரர்களே! அவரிடம் செல்லாதீர்கள்.

ஓ யமதர்மராஜரே! ஸர்வலோகேஶ்வரரான விஷ்ணுவின் பக்தர்கள் எப்படி இருப்பார்கள்? என லக்ஷணத்தைக் கூறுங்கள் என கிங்கரர் கேட்க, தர்மராஜன் உரைத்தார்.

---

*வீடு வாசல் மனைவி மக்கள் அதற்கு பிறதிபந்தமே*

விஷ்ணு பக்தன் தனது வர்ண ஆச்ரம தர்மத்திலிருந்து சிறிதுகூட சலிக்கமாட்டான். தனது நண்பனிடமும் பகைவனிடமும் (பகவான் ஸமமாக இருப்பதால்) ஸமமாக இருப்பான். ஒரு பொருளேயும் பிறரிடமிருந்து அபஹரிக்க மாட்டான். ஒருவரையும் கெடுக்கமாட்டான். எப்போதும் சுத்த மநமுள்ளவனுக இருப்பான்.

கலியினுல் ஏற்படும் எந்தவகையான தீங்கும் பக்தன் மநதைக் கெடுக்காது. எப்போதும் எந்த வேலே செய்தாலும் ஸதா பகவானே நினேத்துக்கொண்டேயிருப்பான்.

பிறரது பொருள் ஸ்வர்ணமாயினும் அதை எவரும் கவனிக்காமலிருந்தாலும் அதில் ஆசை வைக்கமாட்டான். அதைக் குப்பைபோலக் கருதுவான். விஷ்ணுவைத்தவிர அவன் மநதில் வேமுெரு நினேவுமிராது.

ஸ்படிக மலேபோல் நிர்மலமான ஸ்வரூபமுள்ளவன் பகவான். காமக்ரோதம் முதலிய தோஷமுள்ள மநதிலே அவன் தோன்றமாட்டான். ஸ்வச்சமான நிலா போன்ற பகவான் எங்கே? காமாதி நிறைந்த மநமெனும் சிறிய தீபமெங்கே?

நிர்மலமான புத்தி உள்ளவன், ஆத்மாநந்தத்தில் அமிழ்ந்தவன், சுத்தமான நடத்தை உள்ளவன், எல்லோருக்கும் நண்பன், பிரியமாகவும் ஹிதமாகவும் பேசுகிறவன், கர்வமும் கபடமும் இல்லாதவன் இத்தகையவனது உள்ளக் கோயிலில் பகவான் ஸதா வாஸம் செய்வார்.

பகவான் மநதில் ஸதா வாஸம் செய்துகொண்டிருந்தால் அந்த பக்தன் உலகில் உள்ளோர் கண்களுக்கு ப்ரியமாகவும் அழகாகவும் தோற்றுவான். நல்ல மண்ணில் வளரும் சாலமரம் அழகாகப் பூத்துக் காய்த்துக் கனித்தால் அது அந்த பூமியின் வளத்தால் அல்லவா?

யம நியமங்களால் பாபத்தை அகற்றியவர், ஸதா அச்யுதனிடம் மநதைவைத்தவர், கர்வம் பொறாமைஇவைகளே விட்டவர், இத்தகையவருக்கு மரணபயமில்லே.

சங்க சக்ர கதாபாணியான பகவான் மநதில் ஸதா இருந்தால் ஸகல துன்பத்திற்கும் காரணமான பாபமெனும், அந்தகாரம் கிட்டே அணுகுமா? ஸூர்யன்

---

**ஆனுல் பயந்து ஓடாதே! அங்கிருந்தே முயற்சி**

உதயமானபோது இருள் மறைவதுபோல் பாபமனைத்தும் தானே நீங்கிவிடும்.

பிறர் பொருளை அபஹரிப்பவன் பிராணிகளை ஹிம்ஸிப்பவன் பொய் பேசுபவன் நிஷ்டூரமான சொற்களைக் கூறுபவன் பாபத்தால் கர்வமுள்ளவன் இத்தகையவர் மநதில் பகவான் க்ஷணநேரம் கூட தங்கமாட்டான்.

பிறர் ஸம்பத்தைக் கண்டு ஸஹிக்காதவன் துஷ்டன் கெட்ட ஹ்ருதய முள்ளவன் கோண புத்தி யுள்ளவன் ஸாதுக்களை நிந்திப்பவன் பூஜை தாநம் முதலிய நற்கருமமில்லாதவன் இத்தகையவரிடம் பகவானணுகமாட்டார்.

சிறந்த நண்பன் பந்து மனைவி பிள்ளை பெண் பெற்றோர் வேலைக்காரவர்க்கம் இவர்களிடம் அயோக்யத்தனமாக நடப்பவன் பணத்தில் பேராசை கொண்டவனுமான அதமனிடம் பகவானது அருள் தோன்ருது.

கெட்ட புத்தி தீயகார்யம் எப்போதும் அயோக்யர்களுடன் ஸஹவாஸம் ஓயாமல் பாபம் செய்து பாபபாசத்தால் கட்டுண்டவன் மநுஷ்ய மிருகமாவான். அவனுக்கேது அச்யுதன் அநுக்ரஹம்?

உலகில் காணப்படும் ஸகல வஸ்துக்களும் நானும் வாஸுதேவனுமே. அவர் ஒருவரே பரம புருஷன் என பகவானிடத்தில் அசஞ்சலமான புத்தியுள்ளவர் மரணத்திற்கஞ்சார்.

ஓ புண்டரீகாக்ஷ! வாஸுதேவ! விஷ்ணோ! பூமியைத் தரிப்பவனே! அச்யுதா! ஶங்க சக்கரபரணே! நீ தான் எனக்குச் சரணம் எனக்கூறுபவர் அருகே எனது கிங்கரர்களான நீங்கள் செல்லக்கூடாது.

எவரது மநதில் பகவான் ஸதா குடிகொண்டிருக்கிருரோ? அவரது கண்ணில் நீங்களோ, நானே படக்கூடாது. அவர் செல்லும் லோகம் வேறு.

இங்ஙனம் யமன் தனது கிங்கரரிடம் கூறியதாகக் களிங்கன் குருஶ்ரேஷ்டரான தர்மனிடம் கூறினர்.

தர்மர் ஸஹதேவனுக்குக் கூறியதாகப் பராஶரர் மைத்ரேயருக்கு உரைத்தார்.

**விஷ்ணு புராண யம கீதை முற்றிற்று.**

---

**நித்யம் சிறிது நேரம் ஓய்வு எடுத்துக்கொள்**

# புஸ்தக அறிமுகம்.

**ஆர்ய தர்மம்:** [தமிழ், தர்ம வாரப் பத்ரிகை. வருட சந்தா ரூ. 4/- ஜநார்தநா பிரிண்டிங் ஒர்க்ஸ், கும்பகோணம்.] 41 ஆண்டுகளாக ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் நடத்தி 2-ஆண்டுகளாக நின்று விக்ருதிஸூ சித்திரைமீ 17உ முதல் மறுபடியும் நடக்கின்றது. ஸ்ரீ பரமாசார்யாள் உத்தரவுப்படி "வார விருத்தாந்தம்," சிறுவர்க்கான 'சிறு கதைக்கொத்து' என்ற தலைப்பில் நாமும் விஷயதாநம் செய்தோம். தற்காலத்திற்கேற்றபடி சிறுகதை, தொடர் கதை, பல ஆராய்ச்சி விஷயங்களும் சிறந்த வித்வான்களால் எழுதப்படுகிறது.

**கீதாஸாரமும் பாத்மகதையும்:** மாம்பலம் குருகுல வெளியீடு. தமிழ். 200 பக்கம். விலை ரூ.2/- தபால் சார்ஜ்வேறு. ப்ரதியத்யாயமும் தமிழில் மூலம் அர்த்தம். ப்ரதி அத்யாயத்திற்கும் பாத்ம புராணக்கதை. ஸ்ரீ தேசிகன் தமிழ் பாட்டும் கருத்தும். 30 ஆசிரியர்கள் கூடிய கீதா மஹிமை. ஸௌந்தர்ய லஹரி போல் 51 சுலோகங்களுக்கு ஜபக்கணக்கு, லௌகிக பலன், வேதாந்த பலன், 100 கீதோபதேச ரத்ந மாலை, ஸ்ரீ சங்கராசார்யரின் கீதா தாத்பர்ய சுருக்கம் ஆகிய பற்பல மிக அரிய பெரிய விஷயங்கள் அடங்கிய இதுபோன்ற நூல் இதுவரை எங்கும் வெளிவரவில்லை. சாந்தி தரும் உத்தம நூலிது.

**பாரத் க்ரஹ ஸஞ்சார தலையங்கமும் அறநெறி விகடன் தலையங்கமும்:** மிக மிகக் காரஸாரமாகவும் ரஸமாகவும் நாத்திகத்தைப் பிளந்து ஆத்திகத்தை ஊட்டுகின்றன. பாரத் கிரஹ ஸஞ்சாரம் ஆண்டு சந்தா ரூ. 6. மைலாப்பூரிலிருந்து 4, கிருஷ்ணமாசாரி தெரு, T. நகரில் மாறியுளது.

**ஸ்துதி குஸுமாஞ்ஜலி:** மாம்பலம் குருகுல வெளியீடு. [45 ந.பை. ஸ்டாம்பநுப்பிப் பெறலாம். 8-ம் பதிப்பு.] விவாஹம் சீக்ரம் ஆக கௌரி பூஜை, தீர்க்க ஸௌமங்கல்யம் பெற துளஸீ பூஜை, ஏழ்மை அகன்று செல்வம்பெற லக்ஷ்மி பூஜை, சிவநாமாஷ்டோத்ர 'க்ருஷ்ணாஷ்டோத்ர சதம்' கணேச பஞ்சரத்நம், அன்னபூர்ணாஷ்டகம், சந்த்ர சேகராஷ்டகம், தசாவ தாரஸ்துதி, ஸகல தேவதைகளுக்கும் தனித்தனி ஸ்லோகம், ஸுப்ரமண் யாஷ்டகம் முதலிய எண்ணிறந்த ஸ்துதிகள் நிறைந்தது. இது ஓர் விலை உயர்ந்த பொக்கிஷம்.

**ஸ்ரீ குஞ்சிதாங்க்ரி ஸ்தவம்:** ஸ்ரீ உமாபதி சிவாசார்யர் மூலகர்த்தா. தமிழ். 188 பக்கம். விலை ரூ. 2. கிடைக்குமிடம் V. S. வைத்தியநாத தீக்ஷிதர், ஸ்ரீ நடராஜ வித்யா ஸபை சிதம்பரம். ஸ்ரீ சிதம்பர ரஹஸ்யம், நடராஜ தத்வம் முதலியவைகளை சித்தரித்துக் காட்டும் சுலோகங்கள். மிக விரிவான தமிழுரை, மிகச்சிறந்த நூல். இதேபோல ஷ ஸபை சிதம்பர மாஹாத்ம்யம் முதலியவைகளை வெளியிட்டால் மிக உபகாரமாகும்.

---

## ஆனிமாஸ விசேஷம்.

ஸுக்லபக்ஷ த்விதியையில் ஸ்ரீராமருக்கு ரதயாத்ரோத்ஸவம் செய்யவேண்டும். ஸுக்ல ஏகாதசியில் விஷ்ணு படுக்கிறார். ஆவணியில் புரள்கிறார். கார்த்திகையில் எழுந்திருக்கிறார். அந் நாட்களில் விஷ்ணு பூஜை செய்தால் பிரும்மஹத்தி முதலிய ஸகல பாபங்களும் அகலும்.

அந்த ஏகாதசி அன்றே சாதுர்மாஸ்ய விரதம் ஆரம்பித்து ஆடியில் கறிகாய் பழங்களையும் ஆவணியில் தயிரையும் புரட்டாசி ஐப்பசியில் பாலையும் சாப்பிடாமல் விரதமனுஷ்டிக்கவேண்டும்.

---

**ஆத்மா ஜீவன் இரண்டும் வேறல்ல என நினை**

# பால பாரதம்.

விராட பர்வா—(வைகாசிமீ தொடர்ச்சி)

**கே :** அரசனும் அதற்கு இசைந்து திரௌபதியைப் 'போ' என விரட்டினனை ?

**ப :** அரசன் அவளைப் பார்த்தாலும் அவளுடன் பேசினலும் தனக்கும் அந்த கதி நேருமோ எனப் பயந்து மனைவியிடம் கூறி அவளை யனுப்ப முயற்சித்தான்.

**கே :** ராணிக்கு த்ரௌபதி என்ன பதில் சொன்னுள் ?

**ப :** இரண்டு மாதத்திற்குத் தன்னை ஆதரிக்கும்படியும் அதுவரை நகரத்திற்கோ நகரவாசிகளுக்கோ இத்தகைய ஆபத்து வராது என்றும் தன்னை ரக்ஷிக்காவிடில் ஒரு ஸமயம் கஷ்டம் வரும், ரக்ஷித்தால் பல நன்மைகளுண்டாகும் என்றும் கூறினுள்.

**கே :** நன்மை வேண்டாம். தீமை வராது இருந்தால் போதும் என ராணியும் அரசனும் ஆதாரிப்பார்கள் அல்லவா ?

**ப :** ஆம் ! அதனிடையில் கௌரவர்கள் பாண்டவர்களைத் தேட பல இடங்களுக்குச் சாரணர்களை அனுப்பினுர்கள். எங்கும் காணுததால் பாண்டவர்கள் இறந்திருப்பர் என்று துச்சாசன, துர்யோதனன் முதலியவர்கள் கூற பீஷ்மர், துரோணர் ஆகியோர் பாண்டவர் ஒருநாளும் அகால மரணமாக இறக்கமாட்டார்கள். அவர்கள் உள்ள இடம் செழிப்பாக இருக்கும் என்ருர்கள்.

**கே :** துர்யோதனுதிகள் மேலே என்ன செய்தார்கள் ?

**ப :** விராட நகரம் சுபிக்ஷமாக இருப்பதாலும் ஒரு ஸ்த்ரீயுக்காக கந்தர்வனல் பீமனுக்குச் சமமான கீசகன் கொல்லப்பட்டிருப்பதாலும் பாண்டவர்கள் அங்கே வஸிக்கலாம் என்று யோசித்து அங்கு

---

சென்று பாண்டவர்களைப் பார்த்து முன்கூறியபடி மறுபடியும் 12 ஆண்டுகள் காட்டிற்கு அனுப்பலா மென யோசித்தார்கள்.

கே: எப்படி எதற்காக விராட நகரம் சென்றார்கள்?

ப: ஏற்கனவே கீசகனால் துன்பப்படுத்தப்பட்ட த்ரி கர்த்தன் என்ற சிற்றரசன்தான் போய் விராட னது கோக்களை அபகரிப்பதாகவும் கௌரவர் வேறுதிக்காக வந்து விராடன் கோக்களைக் கவரும் பொழுது பாண்டவர்களைக் கண்டு காட்டிற்கு அனுப்பலாம் எனவும் முடிவுசெய்து த்ரிகர்த்தனை முதலில் அனுப்பினார்கள்.

கே: அவன் வந்து பசுக்களை பிடிக்கும்பொழுது விராட னோடு யுத்தம் நேர்ந்திருக்கும் அல்லவா?

ப: ஆம்! அந்த யுத்தத்தில் தர்மராஜர் தானும் பீம னுடனும் நகுல ஸஹதேவர்களுடனும் வில்லேந்தி போர்களத்திற்கு வந்தார்.

கே: பகைவர் அவர்களைக் கண்டுபிடித்து விடமாட்டார் களா?

ப: அக்ஞாத வாஸ காலமும் அநேகமாக முடிந்து விட் டது. அவர்களும் பழயஸன்யாஸி சமையற்காரன் யாதவர் வேஷத்துடன் இருந்தனர்.

கே: துர்யோதநாதிகள் முதலில் ஸங்கல்பித்தப்படி வட திசையை நாடிவந்து விராடன் கோக்களை அபஹரி த்தார்களா?

ப: ஆம், அச்சமயம் அரசன் இல்லாததால் உத்தம குமாரனை பகைவரை வென்று கோக்களை மீட்கும் படி யாதவர் வேண்டினர்.

கே: அவனுக்கு பிஷ்ம துரோணாதிகளை எதிர்க்கும் சக்தி உண்டா?

ப: அவன் சிறுவன், பயந்தாங்குள்ளி! ஆனால் எனக்கு தக்க சாரதியிருந்தால் அர்ஜுனனைப் போல் பகை வரை வென்று வெற்றி பெறுவேன்.

---

கைகால் புலன்களை அடக்கலாம், ஆனால்



# சாந்தி விலாஸம்.



( ஸ்ரீ கணபதி தீக்ஷிதர்)

32. दाराः पुत्राश्शयनमशनं भूषणाच्छादने वा
यच्चेदृक्षं पुमभिलषितं तेषुमाशब्दिकःकः।
किंत्वेतेषां भवति नियमः सेवनेकोऽपिकोऽपि
द्वेषस्तस्मिन्नपियदि भवेत्तत्रवक्ता कृतान्तः॥

தா3ரா: புத்ராஶ் ஶயநமஶநம் பூ4ஷணச்ச2ாத3நேவா
யச்சேத்3ருக்ஷம்புமபி4 லஷிதம் தேஷுமா ஶப்திக: க:।
கிம்த்வேதேஷாம் ப4வதி நியம: ஸேவநேகோऽபி கோऽபி
த்வேஷஸ்தஸ்மிந்நபியதி3 ப4வேத்தத்ர வக்தாக்ருதாந்த:॥

மனைவி புத்ரன் நல்ல படுக்கை நல்ல சாப்பாடு நல்ல ஆபரணம் நல்ல வேஷ்டி புடவை இதுபோன்ற மனிதர் விரும்பக் கூடிய எந்த பொருளையும் அநுபவிக்காதே என எவரும் தடுக்கவில்லை. ஆனால் இவைகளை அநுபவிக்கும்போது சில சில நியமங்களை அநுஸரி என சாஸ்த்ரம் கூறுகிறது. அதில் உனக்கு த்வேஷமிருந்தால் அதற்குப் பதில் கூறுபவன் யமனே.

ஶாஸ்த்ர விரோதமில்லாமல் ஸகல ஸுகங்களையும் அனுபவி-ஶாஸ்த்ர விரோதமாக அநுபவித்தால் யமயாதனையை அனுபவிக்க வேண்டும்.

33. वेदाभ्यास व्यसनरसिकैः स्थीयते तावताकिं
सूक्ष्माबुद्धिः श्रुतमिव विशत्य श्रुतं तावताकिम्।
जल्पारम्भे जयति नियतं वादिनस्तावताकिं
निर्वेदार्तं नयदिहृदयं शान्तिमभ्येति पुंसः॥

வேதா3ப்4யாஸ வ்யஸனரஸிகை: ஸ்தீ2யதே தாவதாகிம்
ஸூக்ஷ்மா பு3த்3தி:4 ஶ்ருதமிவ விஶத்ய ஶ்ருதம்தாவதாகிம்
ஜல்பாரம்பே4 ஜயதிநியதம் வாதி3ந ஸ்தாவதாகிம்
நிர்வேதார்தம் நயதி3ஹ்ருத3யம் ஶாந்தி மப்4யேதிபும்ஸ:

வேதமோதுவதில் அளவுகடந்த அன்பு கொண்டால் போதுமா? கேளாத விஷயத்தைக்கூட கேட்டதுபோல் கருதும் கூர்மை

---

மனதை அடக்குவதே கஷ்டம்—அப்யாசம் செய்.

யான புத்தியிருந்தால் மாத்ரம் போதுமா? வாதியை வெல்லக் கூடிய ஸாமர்த்யம் இருந்துதான் பயனென்ன? மநம் ஶாந்தி அடைந்தால்தான் மனிதனுக்கு நன்மை.

34. यस्त्वत्यन्त व्यवसितमतिः संजिघृक्षेत धर्मम्
खट्वाङ्गादे रिवनकिमलं तस्य यामार्धमायुः ।
दुष्पाण्डित्या दपहृतमतिः यःपुनः संशयात्मा
कस्मै तस्यप्रभवतु वृथा काकव द्दीर्घमायुः ॥

யஸ்த்வத்யந்த வ்யவஸிதமதி: ஸம்ஜிக்4 ருக்ஷேத த4ர்மம்
கட்வாங்கா3 தே3ரிவ நகிமலம் தஸ்ய யாமார்த4 மாயு: |
து3ஷ்பாண்டித்யாத3பஹ்ருதமதி: ய: புன: ஸம்ஶயாத்மா
கஸ்மை தஸ்ய ப்ரப2வது வ்ருதா2 காகவத்தீ3ர்க4 மாயு: ||

தர்மத்தை அநுஷ்டிக்க வேண்டுமென்ற சிறந்த முயற்சி உள்ளவனுக்கு கட்வாங்கன் முதலியவர்போல் அறை யாம காலம் ஆயுஸ் இருந்தால் போதாதா? நல் வழியில் தேடாத பாண்டித்யத்தால் உண்டான புத்தியுள்ளவன் காக்கைபோல் வெகுநாள் ஜீவித்தால் என்ன பயன்? நல்வழியில் கல்வி கற்கவேண்டும். கல்வியைத் தர்மத்திற்குப் பயன் படுத்தவேண்டும்.

35. अर्थानस्यु र्यदिविजिहिमो धर्ममर्थैकसाध्यं
कायक्लेशैः कतिकतिविधः साधनीयोनधर्मः ।
कायः श्रान्तो यदिभवतिकः तावता धर्मलोपः
चित्तं दत्वासकृदिव शिवेच्चिन्तितं साधयामः ॥

அர்தா2நஸ்யுர் யதி2விஜிஹிமோத4ர் மமர்தை2கஸாத்யம்
காயக்லேஶை: கதிகதிவித:4 ஸாதனீயோ நத4ர்ம: |
காய: ஶ்ராந்தோ யதி3ப4வதிக: தாவதா த4ர்மலோப:
சித்தம் த3த்வா ஸக்ருதிவ ஶிவேசிந்திதம் ஸாத4யாம: ||

பணம் இல்லாவிடில் பணத்தால் மாத்ரம் செய்யக்கூடிய தர்மத்தைச் செய்யவேண்டாம். காயக்லேசத்தால் எவ்வளவோ தர்மம் செய்யலாம். உடல்சிறிது இளைத்தால் அதனால் தர்மத்திற்கு லோபமில்லை. ஒருமுறைச் சிவனிடம் சித்தத்தைச் செலுத்தி வேண்டிய பயனைப் பெறலாம்.

---

**பாழான என் மநம் குவிய ஒரு வழி செய் என வேண்டு.**

# ஹாலாஸ்ய மஹிமை.

ஆகமப் பகுதி.

**அஷ்டமகாஸித்தி உபதேசித்தல்.** (வைகாசியீ தொடர்ச்சி)

கிருத்திகா தேவிகள் உபதேசத்தையும் உமையையும் ஒருமிக்க மறந்தனர். அதைக்கண்ட ருத்ரன் அவர்களைப் பட்டமங்கல மெனும் இடத்தில் பாறையாக இருக்கும் படிச் சபித்தார். காலில் வீழ்ந்து சாபவிமோசநம் எப் போது? என வேண்டினர். மதுரையில் பல லீலைகள் புரியும்போது ஸித்தகுருவாக வந்து நிஜ உருதந்து அஷ்டஸித்திகளையும் உபதேசிப்போம் என்ருர்.

1 அணிமா: சிறியதிலும் சிறிது, 2 மஹிமா: எங்கும் வியாபித் திருத்தல், 3 கரிமா: மேருமலைபோல் கனமாய் இருத்தல், 4 லகிமா: மிகலேஸாக இருத்தல், 5 ப்ராப்தி: ஒரே க்ஷணத்தில் எல்லாவற்றையும் அடைதல், 6 ப்ரா காம்யம்: இஷ்டமான உரு எடுத்து இஷ்டமான இடஞ் செல்லுதல், 7 ஈஸித்வம்: ஈஸனைப்போல் ஸர்வ வல்லமை, 8 வஸித்வம்: உலகை எலாம் தன் வஸமாக்கல். கல்லான கிருத்திகைகளைப் பெண்ணுக்கி ஸோமஸுந்தரர் இவை களை உபதேசித்தார். **அஷ்டஸித்தி உபதேசகாய நம:**

## காடுவெட்டி சோழனுக்குக் காக்ஷி.

சோழமண்டல தலைநகர் காஞ்சி. காடுகளையும் மந தை அண்டிய காமாதி காடுகளையும் வெட்டி பக்தி விதை யைப் பரப்பியவன். அதனுல் காடுவெட்டி என்பர். மதுரா நாதன் பிரத்யக்ஷமாகி பலலீலைகளைச் செய்வதைக் கேட்டு அவரை தர்ஸிக்க அவா கொண்டான். அரசர் களுக்கு அன்யோன்யம் பகமையும் நாடு பிடிக்கும் ஆசை யும் இயற்கை. சோழனைக் கண்டவுடன் பாண்டியன் சிறைபடுத்துவான். என்செய்வது? கனவில் தோன்றி, மாறு வேடம் பூண்டு இரவில் வந்து என்னை தர்சி என்ருர் கைலாஸநாதன். அங்ஙனமே வந்த காடு வெட்டியை வைகையாற்றின் பிரவாகம் தடுத்தது. என் செய்வான்? கதறினன். ஸுந்தரர் ஒரு ஸித்தராகி வெள் ளத்தை அகற்றி வடக்கு கோபுர வாயற்படிவழியாக ஆல யத்திற்கு அழைத்துச் சென்று திவ்ய தர்ஸநம் செய்வித் தார். உதயமாவதற்குள் காடுவெட்டி காஞ்சி திரும்பினன்

கோபுர கதவுகளுக்கு இரவில் மீன் முத்ரை வைப்பது பாண்டியர் பழக்கம். சோழராஜன் சென்றவுடன் ரிஷபமுத்ரையை வைத்தார் ஸித்தர். காவலாளிகள் அரசனிடம் இதை அறிவிக்க, அரசன் ஆச்சர்யப்பட்டு சிவலீலையை உணர்ந்து ஆநந்தம் அடைந்தான்.

**தண்ணீர் பந்தல் வைத்தல்:—** காடு வெட்டி மதுரா நாதனைப் பகைவன் அச்சமின்றி பகலிலும் இரவிலும் ஸேவிக்க ஆசைகொண்டான். பாண்டியனுக்குத் தன் மகளை யளித்து உறவினால் அதை ஸாதிக்கக் கருதி ஆடை ஆபரணங்களுடன் இச்செய்தியை பாண்டியனுக்கு அநுப்பினான்.

குலபூஷணன் மகனான ராஜேந்த்ர பாண்டியனும் அதை அங்கீகரித்தான். இதை அறிந்த ராஜஸிம்மன் என்ற அவனது தம்பி காஞ்சிமா நகரம் சென்று காடு வெட்டி மகளைத் தானே மணந்தான். தன்னுடன் வந்து ராஜேந்த்ரனை வென்று தனக்குப்பட்டம் சூட்டும்படி வேண்டினான். தனது மகள் ராணியாகி தன் பேரனும் அரசனாக வேண்டுமென ஆசைகொண்டு அதற்கிணங்கினான். திடீரென காடுவெட்டி நட்பை விட்டு பகைமை கொண்டு போர்புரிவதைக்கண்டு ஆச்சர்யமடைந்தான் பாண்டியன். இளையவன் செயலிது என உணர்ந்து ஆலயம் சென்று ஐயனை வேண்டினான். போர் செய். வெற்றி உனது. என்ற சொல் தோன்றிற்று. இருசேனைகளும் கைகலந்தன. கடும் போர் நிகழ்ந்தது. கதிரவனும் கடுமையாகக்காய்ந்தான்.

பகைவர் பாணத்தைவிட கதிரவன் வெப்பம் கடுமையாக இருந்தது. கிணறு குளங்கள் வறண்டன. செடி கொடிகள் எரிந்தன. தாஹம் தாஹம் என சேனையில் உள்ளோர் கதறினர். பகவான் நான்குவேதங்களை 4 கால்களாக நிறுத்தி கங்காமிருதத்தை அளிக்க ஓர் தண்ணீர் பந்தல் வைத்தார். தானே நீர் தரும் தொண்டனாக வந்தார். அவர் தன் திருமேனியே தாஹத்தை அகற்றிற்று. அவர் ஒருவருக்கு நீர்தர அனைவர்க்கும் அது அவரவர் அருகே சென்று ஆறு போல் பெருகிற்று. பகைவர்க்கு சிவனருளில்லை. நீருமில்லை. வெற்றியுமில்லை. பாண்டியவீரர்களின் பாணவர்ஷத்தைத்தாளாமல் புறங்காட்டி ஓடினர். சுந்தரக்

---

கடவுளின் ஆணைப்படி ராஜேந்திரன் அவ்விருவர்களையும் சிறைப்படுத்தி உடனே விடுவித்து நல்மதி கூறி சிறந்த பொருள்களைத் தந்து சிவபக்தியுடன் வாழும்படிக் கூறி அனுப்பினான்.

*ரஸவாத லீலை:—* மதுரைக்கருகே புஷ்பவனம் (திருப்பூவனம்) என்றதோர் திவ்ய க்ஷேத்ரமுளது. அங்கு ருத்ர கன்னிகா என்ற வகுப்பைச்சார்ந்த ஹேமநாதா என்றோர் வேசி இருந்தாள். தனக்குக்கிடைக்கும் பொருளைக் கொண்டு சிவனடியார்களுக்கு அன்னமளித்து மதுரா நாதனை நித்யம் ஸேவித்து வந்தாள். சுந்தரேசனுக்கு ஸ்வர்ணத்தினால் ஒரு விக்ரஹம் செய்ய வேண்டுமென்பது அவளது ஆசை.

ஆனால் அவளுக்குவரும் வருவாய் அன்றன்று வரும் அடியார்க்கு அன்னமளிக்கவே செலவாயிற்று. பொருள் மீதாததால் மனம் வருத்தங்கொண்டாள். உடல் இளைத்தது. சுந்தரர் ஒருநாள் ஸித்தர் வேடம் பூண்டு அவள் வீடு சென்று அடியார்கள் உண்பதைக் கண்டு களித்தார். அவளது வேலைக்காரிகள் வேண்டியும் உண்ணவராமல் உன் தலைவியைக் கூப்பிடு என்றார். அவள் வந்து வணங்க உன் உடல் இளைக்கக் காரணம் யாது? இவ்வளவு தர்மம் செய்தும் உன்மனம் சிந்தை பெற்றதேன் என்றார்.

அவள் தனது எண்ணத்தை வெளியிட உனது வீட்டிலுள்ள பித்தளை ஈயம் முதலிய லோஹபாத்ரங்களை எடுத்து வா என்றார். அவள் அங்ஙனமே கொண்டு வர அவைகள்மீது திருநீரைத்தளித்து இரவில் அவைகளைப்புடம் போடு; தங்கமாகும். அதனால் உனது விருப்பைப் பூர்த்தி செய் என்று ஆகாயமார்க்கமாக மறைந்துச் சென்றார். அந்த தேவ தாஸி அங்ஙனமே செய்ய அவைகள் பத்தரை மாத்துத் தங்கமாயின. அதனைக் கொண்டு நினைத்தபடி அரியதோர் ஸ்வர்ண விக்ரஹம் செய்வித்தாள். மிக அழகாக அமைந்த அதன் இரு கன்னங்களையும் தன் விரல்களால் தொட்டு முத்தமிட்டு மகிழ்ந்தாள். அவள் கை விரல் பட்ட அடையாளம் திருபூவந விக்ரஹத்தில் இன்றும் உள்ளது. உத்ஸவாதிகளைச் செய்து அவள் சிவகதி பெற்றாள்.

---

சும்மா இருப்பதே சுகம் என்பர் க்ஞாநிகள்.

**சோழனை மடுவில் வீழ்த்தியது:—** பாண்டியர் வம்ஶத்திலே சுந்தரேசநாத சேகரன் என்ற பாண்டியன் ராஜ்ய செலவுகளைக் குறைத்து தனது ஸகல பொருள்களையும் கொண்டு ஸோமசுந்தரருக்கு அழகிய ஆபரணங்களைச் செய்து வந்தான். சேனை மிகக் குறைவாக இருப்பதைக்கண்ட சோழநாட்டரசன் எண்ணிறந்த சேனைகளுடன் வந்து மதுரையை முற்றுகையிட்டான். அரசன் ஆலயஞ்சென்று ஐயனே! ஏழை என், செய்வேன்? பகைவன் பலவான் எனக் கதறினன். அஞ்சாது போர் புரி. எனது ஆணையால் வெற்றி பெறுவாய் எனவாக்கு தோன்றிற்று. போரும் பலமாக நடந்தது. ஓர் வேடராஜனைப் போல் வந்து சுந்தரேசன் சோழனது சேனைகளை முறியடித்தார். சோழன் பயந்து ஓட பாண்டியன் அவனைப் பின்பற்றி வெகுதூரம் துறத்தினன். மிக பலிஷ்டனன வேடராஜன் மறைந்து விட்டார் எனக்கண்டான் சோழன். பாண்டியனை எதிர்த்தான். இவன் ஓடிவர சோழன் அவனைப் பின் தொடர்ந்து வந்து ஓர் அகிழில் மூழ்கி இறந்தான். பாண்டியன் வெற்றி பெற்றான்.

**அக்ஷய்ய தண்டுல மளித்தல்.**

மதுரா நகரிலே வேளாள குலத்திலே தோன்றிய சிவ பக்தனிருந்தான். தர்மஶீலை என்ற மனைவியுடன் அடியார்க்கு அன்னமளிப்பதிலே தன்பொருளை யெல்லாம் செலவு செய்து வந்தான். கைப் பணம் செலவான பின் கடன் வாங்கி தர்மம் செய்தான். திருப்பி யளிக்க ஶக்தியில்லை. ஆதலால் கடன் தருவாரில்லை. அடியார்க்களிக்காமல் நாம் உண்பதா என மனைவியுடன் பலநாள் பட்டினியிருந்தான் பிரதிதிநம் ஆலயம் செல்வான். ஒரு நாள் அடியார்க்கு அன்னமளிக்க பொருளில்லையே என ஸ்வாமி முன்னிலையில் வருந்தி வேண்டினன்.

உனது வீட்டிலே எடுக்க எடுக்கக் குறையாத அரிசி மூட்டை தந்தோம். அதைக்கொண்டு அடியார்க்கு அமுது அளி என்ற அஶரீரிச் சொல்லைக்கேட்டான். இல்லஞ் சென்று அரிசிக் கோட்டையைக் கண்டான். அடியார்க்கு அன்னமிட்டு பெருவாழ்வு வாழ்ந்து முடிவில் கைலாஸஞ் சென்றான்.

---

**சிறிது அறிவு வந்தால் அஹங்காரமும் வரும்**

வைத்தியப் பகுதி.

# ஆயுர் வேதம் (8)

Dr. V. K. வெங்கிடசாமி,
M. B, B. S., F. I. M.



**ஔஷத வர்க்கம்**—(வைகாசியீ தொடர்ச்சி.)

**ஸம்பிராப்தி** -தோஷங்கள் தனியாகவோ, சேர்ந்தோ அதற்கேற்ற காரணங்களால் கோளாறடைந்து, இரஸம் இரக்தம், மேதஸ், மூத்திரம், கபம், பித்தம், ஸ்வேதம் முதலியதின் தேக திரவ தாதுக்களைப் பிரகோபிக்கச் செய்கின்றன. இவைகள் ஜாடராக்னியை மந்தப்படுத்தி மலத்துடன் கலந்து அபானவாயுவினுல் வெளியே தள்ளப் பட்டு அதிஸாரம் என்ற வியாதியை உண்டு பண்ணு கிறது. சோகம் காரணமாகும்போது அதனுல் கிளம்பும் மனத்தாங்கலும் உடற்சூடும் பித்தத்துடனுவது ஜாடராக் னியுடனுவது கலந்து, இரக்தத்தைக் கோளாறடையச் செய்கிறது. இது பிறகு மலத்துடனே தனியாகவோ கீழ்நோக்கி வெளிவருகிறது.

**ஆமாதி ஸாரத்தில்** – அஜீர்ணத்தால் ஆமதோஷம் என்ற நிலை ஏற்பட்டு தேகமெங்கும் பரவி ஸகல தாதுக் களையும் மலங்களையும் கலக்கி அதிஸாரத்தை உண்டு பண்ணுகிறது. பித்தாதி ஸாரம் இருக்கும்போது பித் தத்தை விருத்தி பண்ணும் வஸ்துக்களை அதிகமாகவும் அடிக்கடியும் உட்கொண்டால் **ரத்தாதிஸாரம்** உண்டாகும். **பிரவாஹிகையில்** வாதம் அதிகம் பிரகோபிக்கும். அப் பொழுது ஸ்நிக்தம், ரூக்ஷம், தீக்ஷணம், உஷ்ணம் முதலிய குணங்களை தேகத்தில் அதிகரிக்குப்படிச் செய்தால், மிகுந்த கடுப்புடனும் முக்கலுடனும் குதமும் குடலின் உட்புறமும் நெளிந்து கீழ்நோக்கி அடிக்கடியும் சொற்ப மாகவும் சிலேஷ்மம்போன்ற வஸ்துவை வெளிப்படுத்தும்.

**கிரஹணி** – என்ற ரோகம், அதிஸாரம் வந்து குண மடைந்து நிலையுள்ளபோது ஜாடராக்னி மந்தமாயிருந்து அப்போது தகாத உணவுகளைப் புசித்தால் அவ்வக்னி மேலும் க்ஷீணித்து உண்ட உணவைப் பக்குவமாகாத ஆம நிலையிலோ, பக்குவ நிலையிலோ வெளிப்படுத்தியபோது உண்டாகிறது. **விஷூசி** என்ற வியாதி, இந்திரியங்களை அடக்கியாளமுடியாத மூடர்கள் தோன்றியவாறு பேரவா

---

**அதற்குமாத்ரம் இடந்தராதே. ஏமாறுதே.**

வுடன் புசிக்க, வாதம் வெகு கடுமையாகப் பிரகோபித்து ஊசிகளால் குத்துவதுபோல வேதனையை உண்டுபண்ணி, குடலிலுள்ள ஆகாரங்களையும் தோஷங்களையும் மேல் (வாந்தி) கீழாக (பேதி) வெளிப்படுத்தும்போது உண்டாகிறது.

**குறிகுணங்கள்** – அதிஸார **பூர்வரூபத்தில்,** அஜீர்ணம், தேகத்தின் பலபாகங்களில் குத்தல், வேதனை, மலச்சிக்கல், அபானவாயு தடைபட்டு வயிறு விம்மிக்கொள்ளல் ஆகியவை காணும்.

**வாதாதிஸாரத்தில்** – மலம் சிவந்த நிறம். நுரையுடன் கூடியது. சொற்ப அளவு. பசையற்று, ரூக்ஷமாய் அடிக்கடி வயிற்று வலியுடனும் சப்தத்துடனும் வெளிவரும். **பித்தாதி ஸாரத்தில்** மலம் மஞ்சள், இலைப் பச்சை அல்லது சிவந்த நிறம், நாவறட்சி, மயக்கம். தேக அழற்சி, குடலில் எரிச்சல், இவை காணும். **கபாதி ஸாரத்தில்** மலம் அதிகமாகவும் திரள் திரளாகவும் வெண்மை நிறமாகவும், கபத்துடனும், துர்நாற்றத்துடனும், மிகக் குளிர்ந்து வெளிவரும். பிணியாளி மயிர் சிலிர்த்து வருந்துவான். **ஸங்நிபாதாதி ஸாரத்தில்** முத்தோஷாதி ஸாரங்களின் குணங்களுடன், மலம் பன்றிக் கொழுப்பு அல்லது நெய், மாம்ஸம் கழுவிய நீர் இவைகள் போல இருக்கும். **சோகாதி ஸாரத்தில்** குன்றுமணி நிறமாக இரத்தம் மலத்துடனே தனியாகவோ வெளிவரும். சிலசமயம் துர்நாற்றத்துடனிருக்கும். **ஆமாதி ஸாரத்தில்** மலம் பலவித நிறத்துடன் அடிக்கடி வெளிவரும். அதிக பிசுபிசுப்பு, துர்க்கந்தம், தண்ணீரில்போட்டால் அமிழ்தல் ஆகிய தன்மை உடையது. வயிறு உளைக்கும். இரக்தம் மலத்தில் அதிகம் போனால் **இரக்தாதிஸார** மெனப்படும். **பிரவாஹிகையில்,** நோவு அதிகரித்தால் வாதத்தினாலும், அழற்சி உண்டானால் பித்தத்தினாலும், கபம் அதிகம் மலத்துடன் கலந்திருந்தால் கபத்தினாலும், இரக்தம் அதிகம்போனால் இரக்தத்தினாலும் உண்டான வகைகளெனப்படும்.

**கிரஹணி** – என்ற ரோகத்தில் உண்ட உணவை கிரஹித்துவைக்கும் கிரஹணி என்ற அவயவக்கோளாறால்

---

மலம் அடிக்கடி வெளி வருகிறது. மலம் சிலசமயம் கெட்டியாகவும் சிலவேளை திரவமாகவும் இருக்கும். வயிற்றில் வலி காணும். பூர்வ ரூபத்தில் நாவறட்சி, சோம்பல், உடல் பாரம், பலஹீனம், உணவு உண்டவுடன் வரண்டு போதல் அல்லது நேரங்கழித்து ஜீரணமாதல் ஆகியவை காணும். வாதம், பித்தம், கபம், ஸந்நிபாதம், ஸங்கிரஹம் ஆகிய ஐந்து வகைகள் உண்டு.

**வாதக்ரஹணியில்** – மலம் சிலசமயம் திரவமாகவும் ஆமதோஷத்துடன் கலந்தும் சிலவேளை சுஷ்கமாகவும், தெளிவாகவும் இருக்கும். அதிக சிரமத்துடனும், அபாந வாயுவுடனும், சப்தத்தோடும், நுரையுடனும் வெளிவரும். பசி தாகம் அதிகமிருந்தும் ஜீர்ணமாகாமை, கண்பார்வை மந்தப்படுதல், காதில் ஓசை, விலா, துடை, துடை இடுக்கு, கழுத்து இவற்றில் நோவு, இருதயத்தில் வேதனை, ஜீர்ணமாகும்போது வயிற்றில் பொருமல், அது ஆகாரத்தால் தணிவடைதல், மனச்சோர்வு, தேக மிளைத்தல் முதலிய வாதக் கோளாறின் குணங்கள் பல தோன்றும். வாதக்ரஹணி விஷூசியில் முடியலாம்.

**பித்த க்ரஹணியில்** – மலம் துற் நாற்றத்துடனும், திரவமாயும், கறுப்பும் மஞ்சளும் கலந்த நிறமாயுமுள்ளது. புளித்த தேக்கெறிவு, தொண்டையிலும் மார்பிலும் அழற்சி, அரோசகம், அமித நாவறட்சி இவை காணும். **கபக்ரஹணியில்** மலம் உடைந்து ஆமதோஷம், கபம் இவைகளோடு கலந்து கனமாக வெளியாகும். ஜீர்ணம் அதிகம் குறைவாதல், அரோசகம், வாந்தி, அருவருப்புடன் தித்திப்பான தேக்கெறிவு, வாயில் இனிப்பும் பசை பூசியதுபோலும் இருத்தல், பீநசம், தும்மல், இருமல், இருதயத்தில் படபடப்பும் இறுகித் திரண்டது போன்ற உணர்ச்சியும் தோன்றல், சோம்பல், தேகமிளைத்தலின்றி பலஹீனம், கலவியில் விருப்பமின்மை ஆகிய குணங்கள் இருக்கும். **ஸந்நிபாத க்ரஹணியில்** முத்தோஷ வகைகளின் குறிகுணங்கள் சேர்ந்து காணும்.

**ஸங்கிரஹ க்ரஹணியில்** – ஆமதோஷத்துடன் வாதம் மேலிடுகிறது. பலவகைப்பட்ட குறிகுணங்களுடன்கூடியது.

---

தினமும் இருக்கும் அல்லது பத்துநாள், பக்ஷம், மாதம் ஒருமுறை தோன்றும் பகலில் தோன்றி இரவில் தணிவடையும். வெகு நாட்கள் தொடரும். மலம் திரவ மாகவும், திரண்டதாகவும், குளிர்ந்ததாகவும், ஸ்நிக்த மாகவும் இடுப்பு வலியுடன் வெளிவரும். சில சமயம் அதிக அளவில், ஆமதோஷத்துடன் கூடி, பிசுபிசுப்புடனும் சொற்ப வேதனையுடன் அதிக கடகட சப்தத்துடனும் வெளிவரும். தூங்கும்போதும் இருபக்கங்களிலும் வலி, சோம்பல், பலஹீனம், தேகமிளைத்தல் ஆகிய குணங்கள் காணும்.

**விஷூசி** — என்ற வியாதியில், அவயவங்களை ஊசியால் குத்துவது போலிருக்கும். மயக்கம், பேதி, வாந்தி, நாவறட்சி, வயிறுளைத்தல், தலைச்சுற்றல், காலின் ஆட்டுச் சதையில் கடுமையான வலி, கொட்டாவி, தேஹ தாபம், நடுக்கம், தலைவலி, உடல் கரு நிறமடைதல், இருதய வேதனை ஆகிய லக்ஷணங்கள் தோன்றும்.

**அதிஸாரத்தில் அஸாத்யக் குறிகுணங்கள்** — மலம் நாவற்பழம் போலும், கல்லீரல் போலும் அதிகத் தெளிவாகவும், நெய்-தைலம்-வஸை-மூளை-மஜ்ஜை-பால்-தயிர்-மாம்ஸம் கழுவியநீர் இவைகளைப்போலும், இளங்கறுப்பு-கறுப்பு-கறுஞ்சிவப்பு-பலநிற வர்ண ரேகைகள். சவற் நாற்றம், அதிக பளுவு, நல்ல வாசனை. அழுகிப்போதல் அதிக அளவு இக் குணங்களுடனும் இருந்தால், வியாதி அஸாத்தியமாகும். இதர அஸாத்ய குணங்களாவன :— அதிக வயது, ஜ்வரம், வீக்கம், விக்கல், அதிக வறட்சி, அரோசகம், வாந்தி, ச்வாஸம், காஸம், மூர்ச்சை, அழற்சி, கண் இருளடைதல், பக்கசூலை, எலும்புகளில் வலி' அமைதி யின்மை, இந்த்ரியங்கள் உணர்ச்சியற்றுப் போதல், குதமடிப்புகள் அழன்றுபோதல், ஆஸநத்வாரம் மலர்தல். நினைவின்றி வாய் பிதற்றல், உடல் மிக இளைத்தல், வயிறு பொருமல், தேகச் சூடுபோய் சீதளம் மேலிடல் முதலியன. **கிரஹணி** என்ற ரோகத்திலும் இக் குணங்கள் நல்லதல்ல. ஆனால் குழந்தைகள், பால்ய வயதினர்கள், நடுவயதுள்ளவர்கள் இவர்களுக்குக் காணும் கிரஹணி சிகித்ஸைக்கு வசப்படும்.

---

**அநுபவ க்ஞானமே முக்தி எனப்படும்.**

த1ராத4ர: பாதுபார்ஶ்வம் ப்ருஷ்ட2ம் விக்4னஹர: ஶுப:4 |
லிங்க3ம் கு3ஹ்யம் ஸதா3வ்யாத்து வக்ரதுண்டோ மஹாபல: ||
க3ணக்ரீடோஜானுஜங்கோ4 ஊருமண்டல மூர்த்திமான் |
ஏகதந்தோ மஹாபு3த்தி4: பாதௌ3குல்பௌ2 ஸதாவது ||
க்ஷிப்ரப்ரஸாத3னோ பா3ஹூபாணீ ஆஶாப்ரபூரக: |
அங்கு3லீஶ்ச நகா2ன்பாது பாத3ம் ஹஸ்தோரிநாஶன: ||
ஸர்வாங்கா3னி மயூரேஶ: விஶ்வ வ்யாபீஸதாவது |
அனுக்தமபியத்ஸ்தா2னம் தூ4மகேதுஸ்ஸதா3வது ||
ஆமோத3ஸ்த்வக்3ரத:பாதுப்ரமோத:3 ப்ருஷ்ட2தோவது |
ப்ராச்யாம் ரக்ஷது புத்தீ4ஶ: ஆக்னேய்யாம் ஸித்தி4தாயக:
த3க்ஷிணஸ்யாமுமாபுத்ர: நைர்ருத்யாம் து க3ணேஶ்வர: |
ப்ரதீச்யாம் விக்4னஹர்தாவ்யாத் வாயவ்யாம்கஜகர்ணக:
கௌபே4ர்யாம் நிதி4ப: பாயாத் ஈஶான்யாம் ஈஶநந்தன: |
தி3வாவ்யாதே3கதந்தஸ் ராத்ரௌ ஸந்த்4யாஸுவிக்னக்ருத் ||
ராக்ஷஸாஸுரவேதால க்3ரஹ பூ4தபிஶாசத: |
பாஶாங்குஶத4ர: பாதுரஜ: ஸத்வம் தம: ஸ்ம்ருதிம் ||
ஞானம் த4ர்மஞ்சலக்ஷ்மீஞ்ச லஜ்ஜாம்கீர்த்திம்தயாம்குலம்
வபுர்த4நம் சதா4ன்யஞ்ச க்3ருஹம்தாரான் ஸுதான்ஸகீ2ன் ||
ஸர்வாயுத4த4ர: பௌத்ரான் மயூரேஶோவதாத் ஸதா3 |
கபிலோஜாவிகாம்பாது க3வாஶ்வம் விகடோவது ||
பூ4ர்ஜபத்ரேலிகே2த்வேத3ாய: கண்டே2தா4ரயேத்ஸுதீ4: |
நபயம்ஜாயதே தஸ்ய யக்ஷரக்ஷ: பிஶாசத: ||
த்ரிஸந்த்4யம் ஜபதேயஸ்து வஜ்ரஸாரதனுர்ப4வேத் |
யாத்ராகாலே படே2த்3யஸ்து நிர்விக்4னேனபலம்லபே4த்
யுத்த4காலே படே2த் யஸ்து விஜயம் ப்ராப்னுயாத்4ருவம்
மாரணோச்சாட நாகர்ஷ ஸ்தம்ப4மோஹணகர்மணி ||
ஸப்தவாரம் படேத்ய3ஸ்து திநும் ஏகவிம்ஶதிம் |
தத்தத் பலமவாப்னோதி ஸாத4கோ நாத்ரஸம்ஶய ||
ஏகவிம்ஶதி வாரஞ்ச படேத் தாவத்தி3நாநிய: |
காராக்ரு3ஹக3தம் ஸத்யோ3 ராஞாவத்4யஞ்சமோசயேத் ||
ராஜாத3ர்ஶன வேலாயாம் படேத்3யஸ்து த்ரிவாரத: |
ஸராஜானம் வஶம்நீத்வா ப்ரக்ருதிம் சஸபா4ம் ஜயேத் ||
இதம் கணேஶகவசம் கஶ்யபேன ஸமீரிதம் |
ஸர்வரக்ஷாகரம் ஸர்வ ஸர்வகாம ப்ரபூரகம் ||

முத்[3]கலாயசதேநாத[2] மாண்ட[3]வ்யாய மஹர்ஷயே |
மஹ்யம் ஸப்ராஹ க்ருபயா கவசம் ஸர்வஸித்தித[3]ம் ||
நதே[3]யம் பக்திஹீனய தே[4]யம் ஶ்ரத்தா[4]வதேஶுபே[4] |
அனேனஸ்ய க்ருதாரக்ஷா நபா[3]தா[4]ஸ்யப[4]வேத்க்வசித் ||
ராக்ஷஸாஸுரவேதாள தை[3]த்யதா[3] நவஸம்ப[4]வா |
இதி ஸ்ரீ கணேஶ கவசம் நாமஸம்பூர்ணம். ||

(இதை நித்யம் ஏழுமுறை இருபத்தோரு நாள் ஜபித்தால் நினைத்தகார்யம் கை கூடும்.)

மரீசி குழந்தையைத் தேவியினிடம் விட்டுவிட்டு ஆசீர்வாதம் செய்து சென்றார். தேவி குழந்தைபிறந்த நக்ஷத்திரத்தன்று அவருக்கு மங்கள ஸ்நானம் செய்வித்து க்ருத்ஸமதர் முதலியவர்களைக்கொண்டு விநயகருக்கு அலங்கார பூஜைகளைச் செய்வித்தாள். ஒருநாள் தேவியின் ஆஶ்ரமத்தின் ஒரு வாயற்படியிலுள்ள பெரியதோர் மாமரத்தில் வ்யோமாஸுரன் என்பவன் புகுந்து பெருங்காற்றில் அகப்பட்டது போல் அம்மரத்தை ஆட்டிவைத்தான். அதனல் பற்பல மரங்கள் முறிந்து விழுந்தன. ஆச்ரமவாசிகள் அனைவரும் தம் மீது அம்மரம் விழுமோ என்று பயந்து ஓடினர். விநாயகர் அம்மரத்திலுள்ள அஸுரனை உதைத்துக் கொல்ல அம்மரம் முறிந்து விழுந்தது. அவ்வஸுரனும் வீழ்ந்து மாண்டான். அவனுடலால் எண்ணிறந்த மரங்கள் வேரோடு விழுந்தன. மரத்தின் இடையிலுள்ள குழந்தையைத் தூக்கி வந்து பார்வதீதேவி அதற்கு ரக்ஷையளித்தாள்.

அதுவும் அஸுர செயல் என அறிந்து அனைவரும் ஆச்சர்யமடைந்தனர். வ்யோமாஸுரன் இறந்ததைக் கேட்டு துக்கங்கொண்டு கதறினள் அவன் ஸஹோதரி. அவளுக்கு உக்ரமான பசிதோன்ற அநேகம் எருமைகளை புசித்தாள். அதனல் அவள் "ஶத மாஹிஷ பக்ஷிணீ" என்ற பெயர் பெற்றாள். அவள் அழகிய தேவ ஸ்த்ரீ வடிவம் தாங்கி அம்பிகையின் திருவடியை வணங்கினள். அளவுகடந்து தேவியைத் துதித்தாள். அவளை ஆசிர்வதித்து நீ யார்? உனக்கு என்ன வேண்டும்? என்று கேட்க, அன்னையே யான் இந்த்ரனது மனைவி. ஸுவர்க்க லோகத்தை அஸுரர் பிடித்துக்கொண்டு என் கணவனை

ஓடி ஒளியும்படி செய்துவிட்டார். அவரைவிட்டுப் பிரிந்த துன்பத்திஞல் யான் வருந்தி வாடுகின்றேன் என்ருள். அதைக்கேட்டு உமையவள் அஞ்சாதே! அஸுரர்களைக் கொல்வதற்காகவே கணேஶன் அவதரித்திருக்கின்ருன். உன்பதி பதவி பெறும்வரை நீ இங்கு தங்கி இரு என்ருள்.

அந்த அரக்கியும் இந்த்ராணீ வேஷத்துடன் குழந்தையை எடுத்து மடிமீது வைத்து லாலனை செய்து எந்த ஸமயம் அவனைக் கொல்லலாம் என எதிர்பார்த்திருந்தாள், ஒருநாள் அவள் மடியில் படுத்திருக்கும் கணேஶன் அவளது மூக்கையும் காதையும் பிடித்துக்கொண்டு அவளைத் திணரவைத்தான். மூச்சுவிட முடியாமல் அவள் அலறும்பொழுது உமையவள் ஓடிவந்து குழந்தாய் விட்டு விடு, அவளுக்கு யான் சரணமளித்து இருக்கின்றேன் என்று சொல்வதற்குள் அரக்கி மூச்சுவிடமுடியாமல் இராக்ஷஸ ஶரீரத்துடன் இறந்து கிடந்தாள். குழந்தை இவள் அரக்கியென எப்படி கண்டு கொன்ருன்? என ஆச்சர்யப்பட்டு குழந்தைக்கு இத்தகைய தீமை வராதிருக்க எண்ணிறந்த தானங்களைச் செய்தாள். ஏழாவதுமாதத்தில் கமடாஸுரன் பூமியிலே சந்த்ரமண்டலம்போல் அழகிய ரூபமெடுத்து அமர்ந்து இருந்தான். அனைவரும் ஆச்சர்யமடைந்து அதன்மீது ஏறி படுத்தனர். சிலர் வாஸம் செய்தனர். சிலர் இடறி விழுந்து இறந்தனர். உமையவள் கணேஶனைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டித் தூங்கச்செய்தாள். குழந்தையை ஜாக்ரதையாகப் பார்த்துக்கொள்ளுங்கள் என்றுகூறி பதி ஸேவைக்குச் சென்ருள். அச்சமயம் கமடாஸுரன் உடலை அசைத்து தன்மீது உள்ளவர்களையெல்லாம் கீழே தள்ளிக்கொன்ருன். அந்த அதிர்ச்சியால் பல மரங்கள் முறிந்தன. பூமி யசைந்தது. தூங்கியவர் எழுந்து அலறினர். தொட்டிலிலிருந்த விஞயகர் அவ்வஸுரன் மீது விழுந்து படுத்தார்.

பதினுன்கு உலகையும் குக்ஷியில் பரிக்கும் கணேஶனது பாரத்தை ஸகிக்கமுடியாமல் பெரு மூச்சுவிட்டுத் திணறி இறந்தான். அந்த ராக்ஷஸ சரீரத்தின் மீதமர்ந்த குழந்தையைக் கண்டு இது இவன் செய்த அஸுரவத ரூபமான லீலை எனக் கொண்டாடினுர்கள். எட்டாவது மாதத்தில் வெய்யில் தாளாமல் தேவி குழந்தையுடன் உத்யான

வனம் சென்று குளுமையான ஓர் சிலையின் மீது கணே ஶனை யருகில் வைத்துக்கொண்டு படுத்து உறங்கினாள். கல்பாசுரன் என்பவன் அதனுட்புகுந்து பாறையுடன் மேலே பறந்தான். கீழே விழுந்த ஸகிகள் கதறுவதைக் கேட்டு உண்மை யறிந்தாள் உமையவள். அங்கிருந்த வண்ணம் நாதா! வாருங்கள் வாருங்கள், எங்களைக் காப் பாற்றுங்கள், குழந்தையுடன் எவனோ என்னைத் தூக்கிச் செல்கின்றானே! என்று கதறினாள். கல்பாஸுரன் பாறை யை இடித்துத் தள்ளி குழந்தையைக் கொல்ல முயற்சித் தான்.

கணேஶன் தாயைத் தோளின் மீது வைத்து இடது கை யால் அஸுரன் ஶிகையைப் பிடித்து இழுத்து அறைந்து கீழே தள்ளினார். அவ்வஸுரனது உடலின் மீது பத்ம ஆஸனத்தில் அமர்ந்து இருக்கும் குழந்தையைக் கண்டு எல்லோரும் ஆச்சர்யப்பட்டனர். தேவர் பூமாரிப் பொழிந்து கொண்டாடினர். உமையவள் தன்னையும் தாயையும் காத்த தனயனைக் கட்டி ஆசிர்வதித்தாள். மற் றொரு ஸமயம் துந்துபியெனும் அஸுரன் சிறுவன் உருவம் தாங்கி விநாயகருடன் விளையாட வந்தான். சிறிது நேரம் விளையாடி, மிக ருசியான அபூர்வ பழமிது. இதை நீ புசி என்று விஷம் கலந்த பழத்தைக் கொடுத்தான். கணே ஶன் அதை வாங்கி பக்ஷித்து அவனைக் கீழே தள்ளிக் கொன்றார். இங்ஙனம் ராக்ஷஸர்களது மாயையைக்கண்டு பயந்தும் விநாயகனது ஸாமர்த்யத்தைக்கண்டு வியந்தும் அனைவரும் விநாயகனைப் பற்றியே பேசி வந்தார்கள்.

பத்தாவது மாதத்தில் பாதசாரியாக ஆடி ஓடி மழலைச் சொற்களைக் கூறி தாயை மகிழ்வித்தார். அஜகராஸுரன் மலைப்பாம்புபோல் பெரியவாயைத் திறந்து கணேஶனை விழுங்கக் காத்திருந்தான். பகவானும் அதை அறியாத வர் போல் குஹைபோலுள்ள அந்த வாயில் புகுந்தார். கார்யம் கைகூடிற்றென களித்து வாயை மூடினான். இதை அருகிலுள்ள குழந்தைகள் உமையவளிடம் கூற, தேவி, புத்ரவாத்ஸல்யத்தால் கதறினாள். பகவான் தன் உடலைப் பெருக்கச் செய்து அவனை மூச்சு விட முடியாமல் செய்து கொன்றார். அதனிடமிருந்து தப்பி வந்த விநாயகனை

எமனது வாயிலிருந்து திரும்பி வந்ததுபோல் ஸந்தோஷித்தாள். வழக்கம்போல் பரிஹாரங்களைச் செய்து ரக்ஷையளித்து தானம் வழங்கினுள். பதினோராவது மாதத்தில் ஶலபாஸுரன் பட்டுப்பூச்சி உருவமெடுத்து பகவானது எதிரில் பறந்து வந்து உட்கார்ந்தான். அவரதைப்பிடிக்க அது வெகுதூரம் சென்றது. விநாயகரும் அதைப் பின் தொடர்ந்து ஓடிப் பிடித்துக் கொண்டார். உமயவள், குழந்தாய்! அதை விடு. பாவம்! அதை ஹிம்ஸிக்காதே என்ருள். அருகிலுள்ள கற்பாறை மீது அதை எறிந்தார். அது ராக்ஷஸ உடலுடன் வீழ்ந்து இறந்தது.

பன்னிரண்டாவது மாதத்தில் கணேஶன் ஒரு நாள் நர்த்தனம்செய்ய ஆரம்பித்தார். எப்பொழுதுமே நர்த்தநப் பிரியரான நடராஜன் தானும்நர்த்தநம்செய்தார். ஸகல உலக வடிவமாக உள்ள இவர்கள் ஆடும்போது சராசரமான ஸகலபொருள்களும் ஆடின. பூமி அந்த பாரத்தைத் தாளாமல் வருந்தினுள். கணேஶர் தாண்டவத்தை நிறுத்த உலகெலாம் ஓய்ந்தது. அச்சமயம் குழந்தை காலிலுள்ள சிலம்பில் ஓரரக்கன் புகுந்தான். ஆடிக்களைத்த அருமைப் புதல்வனை அன்னை மடிமீதிருக்கச் செய்தாள். சிறிது நேரத்தில் சுமக்க முடியாத பாரமாக இருந்த புத்ரனை மெதுவாக இறக்கி பூமியில் விட்டாள். பகவான் தன்காலை உதர நூபுராஸுரன் நிஜஉருவெடுத்து வந்து குழந்தையைத் தூக்கிச் சென்ருன். பகவான் அவனைப் பூமியில் தள்ளிக் கொன்ருர்.

தேவரிஷி குமாரர்களுடன் கூடி ஒருநாள் விநாயகர் விளையாட்டாக மல்லயுத்தம் செய்து தாயை மகிழ்வித்தார். ஸிந்து அஸுரன் இவர் சரிதத்தைக் கேட்டு இவரே தனக்கு ம்ருத்யு என எண்ணினுன். அவிபுத்ரன் என்ற அரக்கனை அழைத்து அவரைக் கொன்றுவா என அனுப்பினுன். ஆடு உருவாகி அவன் கணேஶருடன் விளையாடும் பலரைக்கொன்ருன். விநாயகர் அவன் மீதுபாய்ந்து அவனைக் கீழே தள்ளிக் கொன்ருர். இரண்டாம் வயதில் குழந்தைகளுடன் காட்டிற்குச் சென்று ஆங்குள்ளகனிகளை உண்டு களித்தார். கூடாஸுரன் என்பவன் அங்குவந்து அச்சிறுவர்கள் நீர் அருந்தும் ஓடையில் விஷத்தைக் கக்கினுன். பல சிறுவர்கள் இறந்தனர். இதை அறிந்த

ஆச்ரமவாசிகள் அழுவதைக்கண்ட கணேசன் கருணைகடா க்ஷத்தினால் இறந்தவர்களை எழுப்பி க்ரூரப் பார்வையினாலேயே அவ்வரக்கனைக்கொன்றார்.

வயது மூன்றாவதாரம்பித்தது. குளத்திலிறங்கி நீய்ந்து விளையாட ஆரம்பித்தார். மத்ஸ்யரூபியான அரக்கன் அதே தக்க ஸமயமென அவரைக்கொல்ல முயற்சித்தான். பகவான் லீலையாக தானும் மீனாகி அவனுடன் சிறிது நேரம் யுத்தம் செய்தார். உமயவள் குழந்தையைக் காணாமல் கதற கரையில் இழுத்து வந்து மத்ஸ்ய அஸுரனைக் கொன்றார். இதைக்கண்டு வியந்து அவரைப் போற்றி எல்லோரும் தம் இருப்பிடத்திற்குக் கிளம்பினர். ஓர் அஸுரன் மலைவடிவமெடுத்து வழிமறித்து நின்றான். அவரவரும் அக்னிஹோத்ரம் அத்யயநம் முதலியவைகளைச் செய்ய அவஸரமாகப் போகவேண்டுமே! இதுஒரு புதிய மலையாக நிற்கிறதே! எப்படிப்போவது? என வருந்தினர். விநாயகர் உடனே விஶ்வரூபமெடுத்தார். அவரது மூச்சுக்காற்றால் அம்மலை சிறகுபோல் ஆகாசத்தில் பறந்து சென்று சுற்றி சுற்றி பூமியில் அஸுரனாகி விழுந்து இறந்தது.

நாலாவது வயது பிறந்தது. குழந்தை தூங்கிக் கொண்டிருந்தது. தேவி தனது இடது கரத்தில் பார்த்திப லிங்கத்தை வைத்து வலது கரத்தால் பூஜை செய்துக் கொண்டிருந்தாள். கணேசர் எழுந்து அம்மா பால்கொடு என அழுதார். இரு இரு இதோவந்து விட்டேன் என விரைவாக தேவி பூஜை செய்தாள். அழுதுகொண்டே வந்த விநாயகர் தன் கையாலடித்து தேவி கரத்திலிருந்த லிங்கத்தைக் கீழே தள்ளிவிட்டார். கோபங்கொண்ட அம்பிகை கையால் குழந்தையை ஓங்கி யடித்தாள். அவர் அழுதுக் கொண்டே அடித்த அன்னையின் கைவிரலைக்கடித்துவிட்டார். ரத்தம் பெருக தேவி கோபங்கொண்டு சிறு கொம்பை எடுத்து அவரை அடிக்க வந்தாள். உடனே அவர் ஸாக்ஷாத் பரமசிவனாக மாறியதைக்கண்டு வெட்கமடைந்தாள். சிவன் மறைய, குழந்தை மற்றவர்களுடன் விளையாடச் சென்றார். அவன் எங்கே? எங்கே? எனத் தேவி தேடிச்செல்ல அதோ இதோவென சிறுவர் காட்டினர். ஆனால் அம்பிகையின் கண்ணில் அவர் அகப்படவில்லை.

தேவியின் புடவையைப் பிடித்துக்கொண்டு அவளுடனே யே அவர் இருப்பதைக் கண்டு ஆஶ்சர்யமடைந்தாள். கோபம் தணியவில்லை.

தனது வஸ்த்ரத்தினுலேயே அவர் கைகால்களைக்கட்டி உன் அப்பாவினிடம் சொல்லி அடிக்கச் சொல்கிறேன் என்ருள். ஸ்வாமி பயந்தவர் போல் பூமியில் விழுந்து புறண்டு அழ கட்டுகள் தானே அவிழ்ந்து விட்டன. எழுந்து அவர் ஓட தேவி அவரைப் பின்பற்றி ஓடினுள். இதனிடையில் கர்த்தமன் என்ற அஸுரன் பிராம்மண வேடந்தரித்து குழந்தாய்! நீ அஞ்சாதே! உன் தாயார் வராத இடத்திற்கு உன்னை அழைத்துச் செல்கிறேன் என்று கூறி குழந்தையைத் தூக்கி விழுங்கி விட்டான். விநாயகன் அடிச்சுவட்டைத் தேடிவந்து அந்த பிராம்மண னிடம் அடி முடிந்ததைக் கண்டாள். ஐயா! இங்கே என் குழந்தை வந்தானு? கண்டீரா? என்ருள். அவர் அம்மா! உன் பிள்ளை எனக்கு எதற்கு? நான் அவனைக் காண வில்லை என்ருர். அதற்குள் பகவான் மெதுவாக அவன் உடலிலிருந்து வெளிப்பட்டு அவரருகே நின்ருர். பிராம் மணு! பொய் சொல்லலாமா? என்ருள் தேவி. அஸுரன் நிஜ ரூபத்தை எடுத்துக் கொண்டு அம்பிகை எதிரிலேயே விநாயகரைத் தூக்கிச் சென்ருன். தேவி வாய் விட்டுக் கதறினுள். பகவான் அவனைவிட பெரிய ஶரீரமெடுத்து அவனைக் கீழே தள்ளினுர். பெரிய சரீரத்துடன் அவன் கீழே விழுந்து இறந்தான். எல்லோரும் ஆஶ்சர்யமடைந்து குழந்தையைப் போற்றினுர்கள்.

ஒரு நாள் கணேஶன் பூமியில் படுத்துப் புறண்டு கோட்டுவாய் விட்டு உடலை முரித்துக் கொண்டார். குழந் தைக்கு என்ன நேரிட்டதோ என ஓடிவந்தாள் உமயவள். குழந்தைவாயில் பதினான்கு உலகையும் தன்னையுங்கண்டு இதென்ன மாயையா? அஸுர வேலையா? என ஶிவனை அழைத்துக் காட்ட கணேஶன் பரமாத்மா. உனக்கு நிஜ உருவைக் காட்டினுர் என்று துதித்தார். கணேஶன் தனது மாயையால் தாயிக்கு ஸாமான்ய குழந்தை என்ற எண் ணத்தைத் தந்தார். ஐந்தாமாண்டில் அதிகாலையிலேயே இவரை விளையாட்டிற்கு அழைத்துச் செல்ல முனி குமாரர் கள் வந்தனர். எப்பொழுதும் விளையாட்டா? உங்களுடன்

விளையாடி விளையாடி காலத்தில் உண்ணுமல் குழந்தை இளைத்துவிட்டான். வெளியேசெல்லுங்கள் என்ருள் தேவி. தாயே எங்கள் தாயாருந்தான் எங்களைக் கோபித்துக் கொள்கிருர்கள். அரை க்ஷணம்கூட கணேமனை விட்டுப் பிரிய மநம் வரவில்லையே? என்ன செய்வோம் என்றனர் சிறுவர்கள்.

விழித்தெழுந்து கணேமன் துள்ளிக்குதித்து சிறுவர்களுடன் விளையாடச் சென்ருர். பலவகையாக ஆடி ஓடி விளையாடினர். கட்காஸுரன் ஒட்டையாக வந்து முனிக்குமாரர்களைக் கொன்ருன். பகவான் அவன் காலைப் பிடித்திழுத்து கழுத்தை முறித்துக் கொன்ருர். அவனது தோழன் விநாயகரது நிழலில் புகுந்து முனிகுமாரர்களைக் கொன்று அவரையும் கொல்ல ஸமயம் பார்த்திருந்தான். ஒரு சிலையை எடுத்து அவன் மீது எறிந்து அவனையும் கொன்ருர். சஞ்சலன் எனும் அரக்கன் பால ரூபமெடுத்து சிறுவர்களுடன் கூடி பந்தாட்டம் ஆடினன். ஜயித்தவரை தோற்றவன் குதிரை யாக்கித் தூக்கிச் செல்ல வேணடும். அங்ஙனம் குதிரையான சஞ்சலன் ஜயித்த விநாயகரை மேலே தூக்கிச் சென்ருன். அவர் ஹிமயமலைபோல் கனமானர். அஸுரன் ஸ்வாமின்! மரணம் மரணம், தெரியாமல் வந்தேன் என்னை விட்டு விடும் எனக் கதறினன். அவனைத்தூக்கி வெகு தூரத்திற்கப்பால் எறிந்தார். இப்படி வெகுநேரம் வீட்டிற்கு வராமலும் உண்ணுமலும் ஆடும் குழந்தைகளை சிக்ஷிக்க வேண்டுமென கையில் பிரம்பை எடுத்துவந்த முனிவர்கள் கணேமனைக் கண்டவுடன் கோபமகன்று திரும்பி விட்டார்கள்.

பகவான் சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டே கௌதமருடைய ஆச்ரமத்திற்கு வந்தார். அஹல்யை பாகம்செய்து வைத்திருந்த அன்னத்தைத்தானும் உண்டு சிறுவர்களுக்கும் அளித்தார். பகவான் கையால் அளித்தது அமிருதம் போலும் அக்ஷய்யமாகவும் இருந்தது. கௌதமர் கோபங்கொண்டு உமயவளுக்கு இப்படிப்பட்ட துஷ்ட புத்ரன பிறக்கவேண்டும்? என்று அன்னப் பாத்ரத்துடன் அவர் கையைப் பிடித்திழுத்து வந்து தேவியிடம் முறையிட்டார். மஹர்ஷே! என் செய்வேன்? இப்படித்தான் பல சேஷ்டைகளைச் செய்கிருன். இவனிடம்

முள்ள அன்பினுலும் தாக்ஷிண்யத்தாலும் பயத்தாலும் என்னிடம் சிலர் சொல்வதில்லை என்று கைகால்களைக்கட்டி உள்ளே தள்ளி பூட்டினுள் அவரை. குழந்தை ஓ என்றழு தார். ஜாக்ரதை இனி இப்படிச் செய்வாயா! என்று கூறி தேவி முனிவரை வழியனுப்பினுள். முனிகுமாரர்கள் அனை வரும் கணேசனைக் காணுமல் கதறினர். பால் அருந்தவோ உண்ணவோ செல்லவில்லை. அவர்களது பெற்ருேர்கள் வந்து தேவியிடம் முறையிட்டனர். வெளியில் தேவி வந்து பார்க்க எல்லாக் குழந்தைகளும் கணேசனுகக் காணப் பட்டனர்.

உள்ளே திறந்து பார்த்தால் அங்கு ஓர் கணேசன்! உள்ளும் புறமும் நிறைந்த வஸ்து அவன் எனக்கண்டாள். கௌதமர் ஆச்ரமஞ்சென்ருர். ஸகல தேவர்களும் நேரே வந்து உண்டுகளித்து அவர்களது எச்சில் இலைகளில் இருக்கக் கண்டார் விநாயகரை. ஸர்வ தேவர்களுக்கும் மூலகாரணமான அவர் உண்டதால் எல்லோரும் திருப்தி அடைந்தனர் என உணர்ந்தார். ஆருமாண்டில் விருகா ஸுரனை அங்குசத்தால் கொன்ருர். ஏழாமாண்டு பிறந் தது. விதிப்படி கௌதமரைக் கொண்டு விநாயகருக்கு உபநயனம் நடந்தது. முப்பத்து முக்கோடி தேவர்களும் எண்பத்தெட்டாயிரம் முனிவர்களும் காணிக்கையுடன் வந்தனர். எங்கும் ஒரே கோலாஹலம்! உத்ஸவம்! வாத் யகோஷம்! கிருதாந்தக காலன் என்ற இரு அஸுரர்கள் மதயானை உருவங்கொண்டு இந்திரனது ஐராவதத்தையும் தேவர்ஷிகளையும் துதிக்கையால் இழுத்துத்தள்ளி ஹிம் ஸித்தான். எல்லோரும் பயந்து ஓடி சிவனிடம் அறிவித் தனர். அதைக்கேட்ட விநாயகர் ஓடிவந்து ஒன்றன் மீது ஒன்றை மோதித்தள்ளி இரு யானைகளையும் கொன்ருர்.

மௌஞ்ஜீ கிருஷ்ணுஜிநம் தண்டம் யக்ஞோப வீதம் இவைகளைத் தரித்தவிநாயகர் உலகிலுள்ள ஸகலபிரும்ம சாரிகளுக்குமெடுத்துக்காட்டாகவிருந்தார். அந்தவேஷமும் அவருக்கு ஒரு அலங்காரமாக இருந்தது. பவதி பிக்ஷாம் தேஹி என அன்னையிடம் பிக்ஷை வாங்கினுர். ஸகல உல கிற்கும் அன்னமளிக்கும் பகவான் தந்தை, சத்ரு ஸம்ஹா ரம் செய்ய சூலத்தையும் பக்தாநுக்ரஹம் செய்ய சந்த்ர னையும் தந்தார் பாலசந்த்ரன் எனப் பெயரிட்டார் ஸகல

தேவர்களும் அவரவர் ஶக்திக்கேற்றபடி பகவானை ஆராதித்தார்கள். அதிதியும் கஶ்யபரும் விநாயகரைக் கண்டவுடன் மஹோத்கடன் என்ற குழந்தையாக தங்களிடம் இருந்து தங்களுக்களித்த ஆநந்தத்தை நினைத்தனர். தங்களைவிட்டுப் பிரிந்ததை நினைத்து வருந்தினர் எங்குமுள்ள என்னை உள்ளத்திலே நினைத்து ஸந்தோஷப்படுங்களென தேற்றினர். தன் புத்ரன் எப்படி அதிதி புத்ரர் ஆவர்? என தேவி திகைக்க அவர் ஸ்வரூபத்தையும் அவதாரங்களையும் எடுத்துரைத்தார் சிவன்.

**மயூரவாஹநம் பெற்றது:–** ஒருஸமயம் பாதாளத்தில் ராஜஸபையிலுள்ள வாஸுகியையும் ஶேஷனையும் கண்டு அவர்களது தாயான கத்ரு முறையிட்டாள். புத்ரர்களே! விநதை என்ற என் ஸகோதரியைக்காண ஒருநாள் அவள் வீடு சென்றேன். முன்னம் நான் அவளை அடிமையாக்கியதை நினைத்து என்னை அவள் வரவேற்கவில்லை. பேசவுமில்லை. ஆஸநமளிக்கவுமில்லை. என்னை அவள் ஸபையில் அவமதித்தாள். அவளது புத்ரன் ஜடாயு என் பின்னலையும் வஸ்த்ரத்தையும் மூக்கால் குத்தி இழுத்தான். ஆதலால் அவளை என் எதிரில் அவமானப்படுத்தி நாஶம் செய்யவேண்டுமென்றாள். இதைக்கேட்டு ஆதிஶேஷன் நான் ஒருவனே விநதையைக் கட்டி வருகிறேன் என தன் பரிவாரங்களுடன் சென்று விநதையைப் பிடித்துக்கட்டினான். அவள் தனது புத்ரனை கருடனை நினைக்க, அவர் ஜடாயு ஶ்யேநன் ஸம்பாதி முதலியவர்களுடன் வந்து ஆதிஶேஷனைத் தாக்கித் தாயை விடுவித்தார். இதைக் கேட்டுக் கடுங்கோபத்துடன் வாஸுகி போருக்கு வந்தான். கருடன் தனது ரக்கையால் அவனை அடித்துத் தள்ளிவிட்டு தாயை காக்கச் சென்றார். வாஸுகி மூர்ச்சை தெளிந்தெழுந்து உக்ரமான விஷத்தைக்கக்கி ஸம்பாதி ஜடாயு முதலியவர்களைப் பாதாளத்திற்குத் தூக்கிச் சென்று சிறையிட்டான். விநதை தன்பதியான கஶ்யபரை வணங்கி தனது புத்ரர்களை விடுவிக்க வேண்டும் என பிரார்தித்தாள். உனக்கு இப்போதுள்ள புத்ரர்களை விட மிக்க பலமுள்ள ஒரு குழந்தைப் பிறப்பான். அவன் முட்டை வடிவமாக இருக்கும்பொழுது விநாயகர் அதை லீலையாக உடைப்பார். அதிலிருந்து வரும் மயில் மூலமாக உனது குறை அகலும்

என்ருர். அங்ஙனமே விநதை முட்டையைப் பெற்று அதைக் காத்துக் கொண்டிருந்தாள்.

விநாயகருக்கு ஏழாவது வயது பிறந்தது. பிரும்ம சாரிக்குள்ள நியமத்தைக் கைக்கொண்டு உஷ:காலத்தில் எழுந்து நான்கு வேதங்களையும் ஓதிஞர். இதைக்கேட்டு ஆஶ்சர்யமடைந்த முநிகுமாரர்கள், கணேஶ! உன்னைப் போல் நாங்களும் வேதம் ஓத அருள்புரி எனவேண்டினர். பகவான் தனது ஹஸ்தத்தால் அவர்களது மஸ்தகத்தைத் தொட, அவர்களும் இவரைப்போலவே நான்கு வேதங் களையும் ஓத ஆரம்பித்தனர். இதே ஹஸ்த மஸ்தக தீக்ஷை எனப்படும். பகவானும் அவர் தோழர்களும் ஸாமகாநம் செய்யும்போது பஶு பக்ஷி மரங்களும் பரவசமாகி ஆநந்த மடைந்தன. எண்பத் தெட்டாயிரம் ரிஷிகளும் வந்து கேட்டு பேராநந்த மடைந்தனர். பெண்கள் எல்லாம் ஓடிவந்து ஆர்த்தி சுத்திக் கொட்டினர். அச்சமயம் ஒரு ராக்ஷஸன் கொடிய விலங்கின் உருவ மெடுத்து முநி குமாரர்களையும் மற்றவர்களையும் கொன்ருன். விநாயகர் ஐந்து கண்களும் நாலு கொம்புகளும் எட்டு கால்களும் நான்கு கரங்களும் மூன்று முகங்களும் இரண்டு வால் களுமுள்ள ஒரு அபூர்வ ரூபத்தை எடுத்தார்.

இதோ பாருங்கள்! அவ்வஸுரனைக் கொல்வதற்கு ஏற்ற உருவ மெடுத்திருக்கிறேன்! என்ருர் பகவான். இதைக் கேட்ட அஸுரன் ஓட ஆரம்பித்தான். பகவானும் சிறுவர்களுடன் கூட அவனைத் தொடர்ந்து அடர்ந்த அரண் யம் சென்ருர். அவ்வஸுரனை ஒரே உதையால் கொன்ருர். அனைவரும் ஆஶ்சர்யப்பட்டனர். அருகிலுள்ள ஒரு மாமரத்தைக் கண்டனர். கணேஶ! மிக அழகான இக் கனிகளை எங்களுக்கு அளிப்பாயா? என்றனர். ஆகட்டும் என மரத்தினருகே அனைவரையும் அழைத்துச் சென்ருர். எல்லோரும் மரத்தின்மீது ஏறி கிளைகளை உலுக்கினர். அங்கு பக்ஷி ரூபத்துடனிருந்து தனது முட்டையைக் காத் துக்கொண்டிருக்கும் விநதை சிறுவர்களை இறக்கையால் அடித்துக்கீழே தள்ளிஞள். தன் நண்பர்களுக்குநேர்ந்ததைக் கண்டு வேகமாக கணேஶர் மாமரத்தில் ஏறிஞர். ஆங் குள்ள முட்டையைக் காலால் உடைத்தார். அதிலிருந்து மிக்க பலமுள்ளதான மயில் கிளம்பி விநாயகருடனுள்ள

பாலர்களைக் கொத்தி ஹிம்ஸித்தது. விநாயகர் கோபங் கொண்டு அதோடு யுத்தம் செய்தார். அதன் மீது ஏறி பகவான் அதைத் தன் வசப்படுத்தினர். விநதை தன் பதி கூறிய விநாயகர் இவர்தான் என அறிந்து புத்ரனுடன் சேர்ந்து அவரை வணங்கித் துதித்தாள். என்ன வரம் வேண்டும்? என அவர் கேட்க, அசஞ்சலமான பக்தி வேண்டும்! மயூரேஶ கணபதி என்று தங்களுக்குப் பெயர் உண்டாகவேண்டும்! என்றும், பாதாளத்தில் சிறை படுத்தப்பட்ட ஜடாயு முதலியவரை விடுவிக்கச் சக்தி தர வேண்டும் என்றும் வரங் கேட்டார்கள். அன்று முதல் கணேஶனுக்கு மயூரம் வாஹநமாயிற்று. ஸஹோதரர் களையும் விடுவித்துத் தாயிக்கும் இன்ப மூட்டிற்று அந்த மயில்.

மயூரேசர் ஒரு ஸமயம் சிறுவர்களுடன் சேர்ந்து ஜலக்ரீடை செய்தார். அச்சமயம் அஸுரன் ஒருவன் அஶ்வரூபமெடுத்து கரையிலுள்ள சிறுவர்களை எல்லாம் கொன்ருன். அவர்கள், கணேஶ! ஶரணம்! ஶரணம்! எனக் கதறினர்கள். பகவான் கரை ஏறிவந்து அறை க்ஷணத்தில் அவனை அடித்துக் கொன்று மறுபடியும் ஜல க்ரீடை செய்தார். பாலர்களுடன் விளையாடும் போது இரு கரம், நான்கு கரம், எட்டு கரம், பன்னிரண்டு கரம், ஆயிரம் கரம் உள்ளவராக உருவமெடுத்தார். சிறுவர் திகைத்து நின்று துதிக்கும்போது விஶ்வரூப மெடுத்தார். பதினான்கு உலகையுங் கண்டு சிறுவர் பயந்து, கணநாத! போதும்! போதும்! உனது பழைய அழகிய ரூபத்தைக் காட்டு என வேண்டினர். அங்ஙனமே ஸுந்தர வடிவனுகி ஜலக்ரீடை செய்தார்.

இவரது அழகைக் கண்டு ஆஶ்சர்ய மடைந்த நாக கன்யகைகள், தங்கள் வீட்டிற்கு வந்து தங்களுடன் சிறிது காலமிருந்து இன்பமளிக்க வேண்டுமென வேண்டினர். என் தாய் என்னைவிட்டு ஒரு க்ஷணங்கூட பிரிந்திருக்க மாட்டாள்! ஆதலால் நான் வருவதற்கில்லை! என்ருர் கணேசர். நாக கன்யகைகள் பலாத்காரமாக அவரைத் தூக்கிச் சென்றனர். முனி குமாரர்கள் கணேஶனைக் காணுமல் அலைந்துத் திரிந்தனர். பார்வதியிடம் சென்று கூறுவோமெனக் கிளம்பிச் சென்றனர். நடு வழியில்

பகாஸுரன் நாரை (கொக்கு) உருவெடுத்து வாயைத் திறந்து படுத்திருந்தான். சிறுவர்கள் அது வழியென எண்ணி உள்ளே புகுந்தனர். விஷஜ்வாலை ஒரு புறம் இருள் ஒரு புறமும் சூழ, மயூரேஶ! எங்கு சென்றாய்? எங்களை ஏன் கைவிட்டாய்? பல ஆபத்துகளிலிருந்து எங்களை முன்னம் காத்தருள்புரிந்தாயே! நாங்கள் என்ன குற்றம் செய்தோம்? என புலம்பினர். இதை அறிந்த பகவான், அவர்கள் முன் தோன்றி, அவன் (நாரை) வயிற்றிலே தானும் புகுந்தார். அவனைக் கொன்று சிறுவர்களைத் தன் வயிற்றில் யாதொரு துன்பமுமின்றித் தூங்கும்படிச் செய்தார். காலையில் சென்ற குமாரர் இன்னும் வரவில்லையே என முநிவர்கள் தேடி வந்தனர். பகவான் ஸகல குழந்தைகளைப் போலவும் உருவெடுத்து அவரவர் வீட்டிற்குச் சென்றார்.

தன் வயிற்றிலுள்ள முநி குமாரர்களுடன் நாக கன்யகைகள் பலாத்காரத்திற்கு உட்பட்டவர்போல் பாதாளம் சென்றார். வாஸுகி, இவருக்கு ஆஸநமளிக்காமல் நீ யார்? என கர்வத்துடன் கேட்டான். பகவான் விரைந்து வந்து அவனது பணாமண்டலத்திலுள்ள நாகரத்நங்களை அபஹரித்தார். வாஸுகி அவரை எதிர்த்துப் போரிட்டுத் தோல்வி அடைந்தான். அவனைத் தூக்கிக் கண்ட ஆபரணமாக அணிந்தார் அவர். அதைக் கேட்ட ஆதிசேஷன் எண்ணிறந்த ஸேனைகளுடன் கூடி விநாயகருடன் போர் புரிந்தான். அவர், மயூரத்தை நினைக்க அது ஓடிவந்து இறக்கைகளால் பகைவன் ஸேனைகளை எல்லாம் அழித்தது. சேஷனையும் மூர்ச்சை அடையும்படிச் செய்தது. பகவான் அதன் வாலைக் கரத்தால் பிடித்துக்கொண்டு அதன் தலையில் காலை வைத்துத் தாண்டவமாடினார். உடல் வலி குன்றியவுடன் அவனும் அடி பணித்துத் துதிக்க ஆதி ஶேஷனை அறணாக அமைத்துக்கொண்டார். மயூரத்திற்கும் ஸர்பங்களுக்கும் நட்பை ஏற்படுத்தி நாக கன்யகைகளுடன் பூமிக்கு வந்தார் விநாயகர்.

தன் வயிற்றிலுள்ள முநிகுமாரர்களை வெளிப்படுத்தினார். முநிவர்கள் தங்களிடம் உள்ள குமாரர்களைப்போல் கணேஶனைச் சூழ்ந்திருக்கும் தங்கள் குமாரர்களைக் கண்டு ஆஶ்சர்ய மடைந்தனர். இதில் உண்மையான தங்கள்

புத்ரர்கள் யார் ? என அறியாமல் வருந்தினர். கணேசர் அவர்களிடமிருந்த குமாரர்களை எல்லாம் விநாயக ரூபிகளாகக் காட்டினர். அதனால் மற்றும் அதிக ஆஸ்சர்யத்தில் அமிழ்ந்தனர். உடனே அவர்கள் பகவானிடம் லயிக்க அவர் நாகலோகம் போய் வருமளவும் தங்களிடமிருந்தவர் அவரால் படைக்கப்பட்டவர் என அறிந்தனர். அன்றியும், பகாசுரனால் அவர்கள் விழுங்கப்பட்டதையும் விநாயகர் நாகலோகம் சென்று ஸேஷனுடனும் வாஸுகியினுடனும் போர் புரிந்து அவர்களை ஆபரணமாக ஆக்கிக் கொண்டு வந்ததையும் கேட்டு மிக ஆச்சர்யமடைந்தனர். பத்தாவது வயதில் ஒரு நாள் பெற்றோர் எதிரில் விநாயகர் நர்த்தனம் செய்து கொண்டிருக்கும்பொழுது ஆச்ரமத்தில் உள்ள முனிவரனைவரும் அங்கு வந்து சிவனிடம் ப்ரார்த்தித்தனர்.

ஸம்போ ! தங்களுக்கு அருமை குமாரன் அவதரித்ததுமுதல் பத்து ஆண்டுகளாக ராக்ஷஸர்கள் இங்கு புகுந்து ப்ரதிதினமும் தவத்திற்கு இடையூறு செய்கின்றார்கள். எங்கள் குமாரர்களும் விநாயகருடன் சேர்ந்து ஸதா ஆடிப் பாடித் திரிகின்றனர். அந்தணர்களுக்குரிய மறை ஓதல், கர்மானுஷ்டானம் முதலியவைகளைக் கைவிட்டனர். ஆதலால் நாங்கள் வேறிடம் சென்று ஆஸ்ரமம் அமைத்துத் தவம்செய்ய அனுமதி தரவேண்டுமென்றார்கள். இதைக் கேட்ட சிவன், முனிவர்களே ! வந்த விக்னங்களெல்லாம் விநாயகனால் அப்பப்பொழுது அகற்றப்பட்டன. நானே வேறிடம் செல்லப் போகிறேன் என்றார். மஹரிஷிகள், கணேசனையும் சிவனையும் போற்றித் தன்னிருப்பிடம் சென்றனர். சிவன் விருஷபாரூடராக பார்வதியுடன் கிளம்பினர். விநாயகரும் மயில் மீது அமர்ந்து அவரைப் பின்தொடர்ந்தார். சிவ கணங்களும் முனி குமாரர்களும் அவர்களைப் பின்தொடர்ந்தனர்.

நடுவழியில் கமலாசுரன் என்பவன் பன்னிரண்டு அக்ஷௌஹிணீ ஸேனைகளுடன் வழிமறைப்பதைப் பார்த்தார்கள். எல்லோரும் ஓடி கணேசனிடம் முறையிட அவர் தந்தையை வணங்கி கமலாஸுரனுடன் போர்புரிய உத்தரவு கேட்டார். அஸுரன் பல அக்ஷௌஹிணீ ஸேனையுடன் வந்திருப்பதால் நீ தனியே செல்வது உசிதமல்ல

என்றார். விக்னேஶ்வரர் உடனே எண்ணிறந்த ஸேனைகளைப் படைத்தார். சிவன் கணேசனுக்குச் சூலத்தைத் தந்து வெற்றி பெறும்படி ஆசீர்வதித்தார். அவரது வீர்யத்தைக் காண வ்ருஷபாரூடராக ஆகாசத்தில் நின்றார். தேவாஸுர ஸேனைகள் இரண்டிற்கும் கைகலந்து கடும் போர் நிகழ்ந்தது. தன் ஸேனை அழிவதைக் கண்டு அஸுரன் பயங்கர ரூபத்துடன் மயூரேசனை எதிர்த்தான். அவரும் விச்வரூபமெடுத்து எண்ணிறந்த ஆயுதங்களைத் தாங்கி யுத்தம் செய்தார். இருவர்களது பாண வர்ஷங்களும் ஆகாயத்தில் பரவி கடுமிருளை உண்டுபண்ணின. இதனால் அசுரனும் தேவரும், பகைவர் என எண்ணி தன் தன் ஸேனைகளையே நாசம் செய்தார்கள்.

கமலாஸுரன் வீரவாதம் செய்து மயூரேசனது ஸேனையை நாசம் செய்தான். கணேசனும் கோபம் கொண்டு அஸுர ஸேனையைச் சரவர்ஷத்தால் மூடிக் கர்ஜித்தார். ராக்ஷஸன் நாகாஸ்த்ரத்தை ப்ரயோகம் செய்து எங்கும் ஒரே ஸர்ப்பமயமாகச் செய்தான். கணேசன் காருடாஸ்த்ரத்தினால் அவைகளை அழித்தார். சக்ராஸ்த்ரத்தினால் கணேசன் ராக்ஷஸ ஸேனையை அழிக்கக் கமலாசுரன் கத்தியைக் கையிலேந்தி மயிலைத் தாக்க வந்தான். பகவான் கத்தியைத் தூள்தூளாக்க, இருவரும் பாண வர்ஷத்தினால் ஒருவரை யொருவர் தாக்கினர். கமலாசுரன் கணபதியை நோக்கி நீ மிகச் சிறுவன். எனது வீர்யத்தை அறியமாட்டாய். ஒரே குத்தினால் உன்னைக் கொல்வேன். நகத்தினால் தலையைக் கிள்ளி எறிவேன். ஹுங்காரத்தினால் உன்னை யமலோகத்திற்கு அனுப்புவேன் என்றான். வீரர் வாயினால் பேசமாட்டார், கையினால் வீர்யத்தைக் காட்டுவார் என்று கூறி ஶரவர்ஷங்களால் அஸுர ஸேனையை மாய்த்து மிகப் பயங்கரமான விச்வரூப மெடுத்தார். இதைக் கண்டு அவன் பயந்தோட அவன் சிகையைப் பிடித்து இழுத்து, ஓடுவது வீரனுக்கு அழகோ? உன் பேச்சைக் கார்யத்தில் காட்டு எனக் கூறினார். பழைய சாந்த உருவுடன் விநாயகர் அவனுடன் போர் புரிய கமலாஸுரனது உடலிலிருந்து ரத்தம் சிந்திற்று. அதிலிருந்து அவனைப்போன்ற அனேக அஸுரர்கள் தோன்றினார்கள். அவனைப் போன்ற பராக்ரமம் வாய்ந்த பலர் எதிர்த்துவர, மூன்றரைகோடி ஸேனைகளை

உண்டுபண்ணி ஸித்தி புத்திகள் விநாயகரிட மனுப்பி னார்கள்.

கணேசர் அஸுர ரத்தத்திலிருந்து வரும் எல்லா அஸுரர்களையும் பக்ஷிக்கும்படி உத்திரவிட்டார். பகவான் சூலாயுதம்கொண்டு கமலாசுரனைப் பிளந்தார். அவனது தலை பீமாநதியின் தென்கரையிலும் அவனது உடல் கிருஷ்ண நதியின் வடகரையிலும் விழுந்தது. தேவர்கள் புஷ்ப மாரிப் பொழிந்துப் போற்றினர். கௌதமர் முதலிய மஹரிஷிகள் வேதவாக்குகளால் பகவானைத் துதித்தார்கள். ''ஜயஜய மயூரேசா'' என்று மற்றவர் போற்றினர். பார்வதீ பரமேச்வரர்கள் அவரைக் கட்டி அணைந்து உச்சி முகர்ந்து ஆனந்தித்தனர். ஆங்குள்ள அனைவரும் சிவனையும் விநயகரையும் அங்கேயே தங்கி யிருக்கும்படி வேண்டினர். அப்படியே அதை ஏற்றுக்கொண்டார். சிவனும் மஹரிஷிகளும் தவம் செய்துகொண்டிருந்தனர். ஒரு நாள் சதுர்முகன் பரமாத்மாவான மயூரேசனைப் பூஜிக்க விதிப்படி அவருக்கு ஷோடசோபசார பூஜைகளைச்செய்து ஸ்தோத்திரம் செய்தார். பல புண்ய தீர்த்தங்களிலிருந்து நிறப்பிய கமண்டுலுவை அவர் கீழே வைத்திருக்க விநாயகர் அதை விளையாட்டாக காலால் இடறினர். புண்ய தீர்த்தங்கள் பூமியில் பெறுகுவதைக் கண்டு பிரஹ்மா வருந்த விநயகர் நீ வருந்தவேண்டாம், இதிலிருந்து 'கமண்டலு' எனும் நதி கிளம்பவேண்டும். அதை தர்சித்தால் வாக்கினல் செய்த பாபமும் தொட்டால் மநதினல் செய்த பாபமும் ஸ்நானம் செய்தால் உடலால் செய்த பாபமும் அகலவேண்டுமென அதற்காகவே நான் இதைக் கிளப்பினேன். நீ செய்த ஸ்தோத்திரத்தை பாராயணம் செய்தால் ஸகல கஷ்டங்களும் அகன்று கோரிய பலன்களும் கைகூடுமென அருளினர்.

பகவானது பதினேராவது வயதில் நான்முகன் குழந்தைகளோடு குழந்தையாய் விளையாடும் இவரது பரமாத்ம ஸ்வரூபத்தைக் காணவேண்டுமென ஆசைக் கொண்டார். கணேசனேடு விளையாடும் முநிகுமாரர்கள் அனைவரையும் தூக்கிச்சென்றார். கணேசன் குழந்தைகளைத் தேடி எங்கும் காணததால் ஸ்வர்க்கம் முதலிய லோகங்களுக்குச் சென்று பார்த்தார்.

